Regd No. M-1908.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஹரிஸமய திவாகரம்.

தொகுதி 1 Vol. 1.

ரக்தாக்ஷி வருஷம் ஆடி- மீ

பகுதி 7. No. 7.

1924 July & August



"தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலைமாற்றலரிது"—தெய்வப்புலவர்.

பொருளடக்கம்.



பண்டித. ஆ. அரங்கராமாநுஜன்-பத்திராதிபன்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 2.] [தனிப்பிரதி அணா 4.

வி. பி சார்ஜ் ப்ரத்தியேகம். அக்கரை தேசகளுக்கு 2-8-0

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஹரிஸமய திவாகரம்.

தொகுதி க. ரக்தாக்ஷி-வரு ஆடி-மீ பகுதி எ.
Vol. I. July & August No. 7.

## ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்த ப்ரகாசிகை.

[145-ம் பக்கத் தொடர்ச்சி.]

இப்படி ஆத்மஸ்வரூபம் ஜ்ஞாநஸ்வரூபமாயும் ஜ்ஞாநாசிரயமாயுமிருப்பதையும், அதடியாகவந்த கர்த்ருத்வ போக்த்ருத்வங்களையும் நிரூபித்து நின்றதுகீழ். இனி ஆத்மாவைப் பற்றியிருக்கும் ஜ்ஞாநஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது.

ஜ்ஞாநமாவது வஸ்துக்களைத்தான் விஷயீகரிக்கும் காலங்களில் தன்னுடைய ஆசிரயத்துக்கு மற்றொன்றை யபேக்ஷியாமல் தானேப்ரகாசிப்பதாயும், ஸங்கோச விகாஸங்களையுடையதாயுமிருக்கும்.

ஸூர்யன் முதலான தேஜ: பதார்த்தங்களைப்பற்றி யிருக்கும் ப்ரபையானது தேஜோமய திரவ்யமாயும், ஸூர்யாதிகளுக்குக்குணமாயுமிருப்பது போல் ஜ்ஞானமும் தான் த்ரவ்யமாயும் ஆத்மாவுக்குக் குணமாயு மிருக்கும்.

இப்படியிருக்கையாலே ஆத்மா தர்மிபூதஜ்ஞாந மென்றும், இது தர்மபூதஜ்ஞாநமென்றும் வழங்கப்படும். இந்த ஜ்ஞாநத்துக்கு எப்போதுமுள்ள ஆகாரம் எல்லாவஸ்துக்களையும் ஒரேகாலத்தில் ஸாக்ஷாத்கரிக்கையாகிற விகாஸமேயாம்.

அப்படிக் கில்லாமலிருப்பது ஸங்கோசம் இந்தஸங்கோசம் ஸம்ஸாரிகளுடைய கர்மாவாலே வந்ததாயிருப்பதால் வந்தேறியாகும்.

ஸம்ஸார ஸம்பந்தமற்ற முக்தர்களுடையவும், நித்யர்களுடையவும், ஈசுவரனுடையவும் ஜ்ஞாநம் எப்போதும் விகாஸமுடையதாயிருக்கும். இந்தவிஷயம் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில்

1 தயா க்ஷேத்ரஜ்ஞ சக்திஸ் ஸாவேஷ்டிதாந் ருபஸர்வகா
ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்ததே''
''அப்ராணிமத் ஸுஸ்வல்பாஸா ஸ்தாவரேஷு ததோதிகா''

இத்யாதி சுலோகங்களால் நிரூபிக்கப்பட்டது.

இப்படியே முமுக்ஷுக்களான ஆழ்வார்களுடைய ஜ்ஞாநமும், நிஷ்பங்கமான யோகத்தையுடைய ரிஷிகளுடைய ஜ்ஞாநமும், எப்போதும்கீழ்ச்சொன்ன விகாஸத்துடனிருக்கும். அதில் ஆழ்வாருடைய ஜ்ஞாந விகாஸத்துக்கு ஹேது நிர் ஹேதுகமான பகவத் கடாக்ஷ விசேஷம். ரிஷிகளுடைய ஜ்ஞாந விகாஸத்துக்கு ஹேது அவர்கள் அநுஷ்டித்த பக்தியோகத்தால் ப்ரஸந்நனான எம்பெருமானுடைய கடாக்ஷ விசேஷம்.

ஆனால் ஜ்ஞானம் பூதகாலீனமாயும் வர்த்தமான காலீனமாயும் பவிஷ்யத்காலீனமாயுமுள்ள எல்லா வஸ்துக்களையும் ஏக காலத்தில் ஸாக்ஷாத்கரிக்கும்படி எங்ஙனேயென்னில்? நம்முடைய ஸித்தாந்தத்தில் தத்வத்ரயமும் நித்யமாகையால் அவஸ்தைகளைப் பற்றியே உத்பத்தி விநாச வ்யவஹாரங்களுண்டாகின்றன. அந்த அவஸ்தாசிரயமான வஸ்துக்கள் எப்போது முள்ளதாகையாலே அந்த வஸ்துக்களை ஸாக்ஷாத்கரிக்கக் கூடும் ஆயினும் அந்தந்த அவஸ்தா விசிஷ்டமாக சாக்ஷாத்கரிக்கக் கூடுமோவென்னில்? காலத்துக்கு அதீதமென்றும் வர்த்தமானமென்றும், பவிஷ்யத் என்றும் சொல்லப்படுகிற வ்யவஹாரம் உபாதியால்வருவதாகையால், உபாதியில்லாத அகண்ட காலத்தில் எல்லாவஸ்துக்களும் உள்ளபடியே தத்ததவஸ்தா விசிஷ்டங்களாக வேயிருப்பதால், அந்தஅகண்டகாலத்தில்ஸாக்ஷாத்கரிக்கக்கூடும். இந்தவிஷயம் பகவத்விஷயத்தில்நாலாம்பத்தில் மூன்றும் திருவாய்மொழி'' ''கோவை வாயாள்'' ப்ரவேசத்தில் பட்டர் நிர்வாஹத்தில் நிரூபிக்கப் பட்டிருக்கிறது.

1. இ-ள் சேதனனுக்கு நியத விசேஷணமாயுள்ள ஜ்ஞானமானது இவனுடைய கர்மாவாலே மறைக்கப்பட்டதாய்க் கொண்டு பிறப்புக்குத்தக்கபடி ஏற்றத்தாழ்வாய் இருக்கும். அதாவது ப்ராணனில்லாத தாதுவர்க்கங்களில் மிகவும் குறைவாயும், புல், பூண்டு, மரங்களில் அவைகளைக்காட்டிலும் அதிகமாயும், விலங்கினங்களில் அதிலும்மிகுதியாயும் இப்படியே மனுஷ்யர்களிடத்தில் இன்னும் மிகுதியாயும் இருக்கும் என்க.



இந்த ஜ்ஞானம் பெத்த தெசையில் இந்திரியங்களின் வழியால் ப்ரஸரித்து விஷயங்களைக் கிருஹிக்கிறபடியால் ஸங்கோசப்பட்டு சாக்ஷுஷாதி வ்யவஹாரங்களையடையும்; மோக்ஷதெசையில் கர்மோபாதிநிவிருத்தமாகையால் இந்திரியங்களை அபேக்ஷியாமல் விகாஸித்து பரஸரிப்பதால் ப்ரத்யக்ஷமென்றே வ்யவஹரிக்கப்படும். இந்த விஷயத்தை,

2 ''அபாணி பாதோ ஜவநோ க்ருஹீத''
பச்யத்யசக்ஷுஸ்ஸச்ருணோத்யகர்ண:
இத்யாதி சுருதிவாக்கியங்களில்கணடு கொள்வது.

ஆத்மா நித்யனுயிருக்கையாவது ''அஜோநித்ய:''
இத்யாதி கீதா சுலோகத்தின்படி ஸ்வத: உத்பத்திவிநாசங்களில்லாமையாம். ஜந்மாந்தரங்களில் பண்ணின கர்மாவினுடைய பலமாக ஜந்மாந்தரங்களில் சுக துக்கங்களை அனுபவிக்கை யாலும் நித்யத்வம் ஸித்தம். இப்படியிருக்க ஆத்மாவுக்கு உத்பத்தி விநாச வ்யவஹாரங்கள் தேகத்தினுடைய சம்யோக வியோகங்களைப்பற்றி வருகிறது.

அணுவாயிருக்கை யாவது 3. ''வால்க்ர சத பாகஸ்ய'' என்கிற வாக்யத்தின்படி அத்யந்தம் ஸூக்ஷமமாய் ஒருவஸ்துவினுடைய தடைக்கும் யோக்யதை யில்லாமை. இந்த விஷயத்தை ஸூத்ரகாரர் (4.)''உத்க்ராந்தி கெத்யா கெதீநாம்'' என்கிறஸூத்ரத்தில் நிரூபித்திருக்கிறார். இப்படியிருக்கிற ஆத்மா, ஹ்ருதயகமலத்திலிருந்தபோதிலும், ஆகாசத்திலிருக்கிற ஸூர்யன் தன்னுடைய ப்ரபையாலே எங்கும் வ்யாபிப்பது போல், ஜ்ஞானமாகிற குணத்தாலே சரீரமெங்கும் வியாபித்து ஸுகதுக்கங்களை அநுபவிக்கிறான். யோகிகளாயிருக்கிற ஸௌபரி முதலானவர்கள் யோக

2 இ-ள் கையில்லாமல் பதார்த்தங்களைக் கொள்ளுகிறான், காலில்லாமல் ஓடுகிறான், கண்களில்லாமல் பார்க்கிறான், காதில்லாமல் கேட்கிறான், என்பதாம்.

3. இ-ள் வாலா நெல்லியினுடைய நுனியை நூறுபங்காக்கி அதில் ஒன்றையெடுத்து நூறுபாகம் பண்ணிய அதிலொரு பாகத்தின் அளவு ஆத்மாவுக்கு உள்ளது என்பது ஆம்

4 இ-ள் ஆத்மா அணுபரிமாணன்; அது எப்படி யென்றால்? சரீரத்தினின்றும் வெளிப்புறப்பட்டு பரலோகத்துக்குப் போகிறானென்றும் மறுபடி இந்தலோகத்துக்கு வருகிறானென்றும் ப்ரமாணமிருப்பதால் என்றவாறு

ப்ரபாவத்தாலே வேறு சரீரங்களிலும் ஜ்ஞானத்தாலே வ்யாபித்து ஸுகாதிகளை அனுபவிக்கிறார்கள்.

5 "குணாத்வாலோகவத்" என்கிற ஸூத்ரத்தில் இந்த அர்த்தம் வ்யக்தம் இப்படி யிருப்பதைக்கொண்டு ஆத்மா விபுவாக சாஸ்த்ரங்களில் வ்யவஹரிக்கப் படுகிறான். ஆத்மாக்கள் சரீரந் தோறும் வேறுபட்டிருந்த போதிலும் எல்லா ஆத்மாக்களுக்கும் ஜ்ஞானம் ஏகரூபமாயிருப்பதைப்பற்றி வ்ரீஹிஸமுதாயத்துக்கு ஏகோவ்ரீஹி: என்று வ்யவஹார மிருப்பதுபோல் ஏகத்வ வ்யவஹாரம் உபபந்நம். இப்படியே என்னுடைய தேகம், என்னுடைய இந்திரியம் என்னுடைய ப்ராணன் என்றுபேதவ்யவஹார மிருப்பதால் ஆத்மா தேஹேந்திரியாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவன். ஆனால் 6 "ராஹோ: சிர:" "மமாய மாத்மா" "சிலாபுத்ரஸ்ய சரீரம்" என்கிற வ்யவஹாரங்களை அபேதபரங்களாக நிர்வஹிப்பது போல் இங்கும் நிர்வஹிக்கலாமே யென்னில், அவ்விடங்களில் பேதம் பாதிதமாகையால் ஔபசாரிகமான அபேதவ்யவஹாரம் ஏற்படுகிறது இவ்விடத்தில் ஆத்மாவுக்கும் சரீரத்துக்குமுள்ள ; பேதத்துக்கு பாதகமில்லாமையால் முக்கியமான பேதவ்யவஹாரமே உபபந்நம். இன்னும் இவைகளினுடைய விஸ்தரம் க்ரந்தாந்தரங்களிற் கண்டுகொள்க.

இனி இந்த ஆத்மாக்கள் பெத்தர்களென்றும், முக்தர்களென்றும், நித்யர்களென்றும் மூன்றுவகையாயிருப்பார்கள். அவர்களில் பெத்தர்கள் அநாதியான பிரகிருதிஸம்பந்தத்தால்வருகிற அவித்யா கர்ம வாஸநா ருசிகளால் தேவாதி சரீரங்களைப் பரிக்ரஹித்து ஸ்வர்க்க நரகாதிகளில் ஸுகதுக்காநுபவம் பண்ணித்திரியும் சேதனர்கள். இங்ஙனமன்றிக்கே மூலப்ரகிருதியில் கர்ணகளேபரவி

5 இ-ள் ஆத்மா தன்னுடைய குணமான ஜ்ஞானத்தால் எங்கும் வியாபித்திருப்பன். அதெப்படியென்றால் ஸூர்யன் ப்ரபையாலேவ்யாபிப்பது போல என்க

6 இ-ள் "ராஹோ: சிர:" என்பதற்குராஹு சிரோபாகமாகயிருக்கச் செய்தேயும் "ராஹோ:" என்கிறஷஷ்டிக்கு அபேதம் அர்த்தமாய் ராகுவைக்காட்டிலும் பேதமில்லாமலிருக்கிற சிரசுஎன்று அர்த்தமாகிறது. "மமாயமாத்மா" என்பதற்கு என்னுடை இந்த ஆத்மா என்பதும்பொருள், இவ்விடத்தில் ஷஷ்டிக்கு அபேதம் அர்த்தமாய் என்னைக் காட்டிலும் வேறில்லாதவன் ஆத்மா என்பது பொருளாம். "சிலாபுத்ரஸ்ய சரீரம்" என்பதற்கு, சிலாமயமான புத்ரனுக்கு சிலைசரீரம், என்று பொருள்படும். இங்கும் ஷஷ்டிக்கும் அபேதமே அர்த்தம்.



துரர்களாய் போக மோக்ஷ சூன்யராயிருந்துள்ள பெத்தர்களில்சிலர் யாத்ருச்சிகஸுக்ருத விசேஷத்தாலே (7) "ஜாயமாநம்ஹி புருஷம்" இத்யாதி சுலோகத்தின்படி பகவத்கடாக்ஷத்துக்கு பாத்ரபூதர்களாய் அதடியாக அத்வேஷாபிமுக்யங்களைப்பெற்று ஸாத்விக ஸம்பாஷணத்தையுடையவராய், மோக்ஷாபிலாஷ முண்டாக ஆசார்ய ஸமாச்ரயணத்தைப் பெற்று, தங்கள் தங்கள் அதிகாராநுகுணமாக பக்திமுதலிய உபாயங்களை அனுஷ்டிக்குமவர்கள். அங்ஙனமன்றிக்கே (8) "நிர்ஹேதுக கடாக்ஷேண மதீயேநமஹாமதே:" என்றும்

(9) "நாஹெளெ புருஷ காரேண நசாப்யந்யேந ஹேதுநா"
கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷயே கஞ்சித் கதாசந"

என்றும் சொல்லுகிறபடியே நிரங்குச ஸ்வதந்தரனான ஸர்வேச்வரன் மயர்வற மதிநலமருள அத்தாலே ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட பகவத் ஸ்வரூப ரூபகுண விபூதிகளையுடையராய் அப்போதேநிரந்தரமான பகவதனுபவத்தைப் பெறவேணுமென்று இச்சையுண்டாகி அதுகிடையாமையாலும் அந்தபகவதனுபவத்துக்குஇடைச்சுவரான ஸம்ஸாரத்தினுடைய கொடுமையை அநுஸந்திப்பதாலும் வந்த த்வரா விசேஷத்தால் கலங்கி அடிக்கடி ப்ரபத்தியை அனுஷ்டித்தும், மடலூருகை முதலான ஸ்வப்ரவ்ருத்திகளை அனுஷ்டித்தும், போருமவர்களான ஆழ்வார்கள் போல்வார். இப்படி அடிக்கடிப்ரபத்தியை அனுஷ்டிக்கச் செய்தேயும், ஈசுவரன்தன்னுடைய அநுபவத்தைக்கொடாமல் மேன்மேலும் அநுபவத்துக்குப் பரிகரமானபரபக்தி பரஜ்ஞான, பரமபக்திகளை அபிவ்ருத்தமாம்படி பண்ணிக்கொண்டுபோரும். ஆதலால் இவர்கள் உத்தேசித்த பலத்

7 இ-ள் "புருஷாவாத்மமானவெள" என்கிற கோசத்தின்படி இவ்விடத்தில் புருஷனென்பது ஆத்மாவை, "மம்" என்பதால் ஜாத்யாதி நியமமில்லை, ஜகியாதின்றுள்ள யாதொரு ஆத்மாவை மதுவென்னும் அசுரனை நிரசித்தாற்போல ரஜோகுண தமோகுணங்களை நிரஸித்துக் கொண்டுபோருகிற ஸர்வேசுவரன் "த்ருசிப்ரேக்ஷணே" என்கிறதாது பாடத்தின்படி) ப்ரக்ருஷ்டமானஈக்ஷணமென்று சொல்லப்படுகிற கடாக்ஷத்துக்கு விஷயமாக்குகிறானோ அந்தஆத்மா ஸத்வநிஷ்டனாய் மோக்ஷத்திலே ருசியுள்ளவனாக ஆகிறான் என்பது.

8 இ-ள் காரணம் ஒன்றும் அபேக்ஷியாத என்னுடைய கடாக்ஷத்தாலே மோக்ஷத்தை அடைகிறான் என்று பகவத்வாக்யம்.

(9) இ-ள் இப்படிப்பட்ட நான் புருஷகாரத்தையாவது மற்றொரு காரணத்தையாவது அபேக்ஷியாமல் கேவலம் என்னுடை இச்சையாலே ஒருகால விசேஷத்திலே ஒருவனைக் கடாக்ஷிப்பேன் என்றவாறு.

துக்கு ஹேது கேவல பகவத்க்ருபையே யொழிய இவர்களநுஷ்டித்த ப்ரபத்தி ஹேதுவன்று. இந்த அர்த்தத்தை (10) "நல மருளினன் என் கொல்என்று, ஆமூலசூடம், அருளால் மன்னுவர்க்கு அன்புக்கடியானததுவே, அடி சேருகைக்கும் ஸாதநம்" என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் அருளிச்செய்தார்.

ஆனுல் இப்படி ஈசுவரனுலே மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுக்கு அஜ்ஞான கார்யமான கலக்கமும், அதடியாக அடிக்கடி ப்ரபத்தியை அனுஷ்டிப்பதும், மடலூருகையும் கூடும்படி எங்ஙனேயென்னில் ஈசுவரன் இவர்களுக்கு அருளினஜ்ஞானம் பக்தி ரூபான்னஜ்ஞானமாகையாலே அதடியாக வந்த கலக்கம் விஷய ஸ்வபாவத்தைப்பற்றி வருவதால் கூடும்.

நித்ய விபூதியில் ஸர்வஜ்ஞர்களான நித்ய ஸூரிகளும் (11) "ஸ்நேஹா தஸ்தாந ரக்ஷா வ்யஸநி பிரபயம் சங்க சக்ராணி முக்யை:" என்கிற பட்டர் ஸூக்திப்படி கலங்குகையாலும் (12 "ஸம்ஸ ப்ருஸந்நாஸநம் சௌரே: விதுரஸ்ஸமகாமதி:" என்கிற சுலோகத்தின்படி மகாமதியான விதுரர் தன்னுடைய க்ருஹத்தில் தான்போட்ட ஆசனத்தில், தான் துர்யோதன ஸஹவாஸத்தால் போடப்பட்ட பொய்யாஸன மென்கிற கலக்கமுண்டாகி, ஆஸனத்தைத்தடவிப்பார்த்தார் என்றுசொல்லுகையாலும், பெரியாழ்வார் குலசேகராழ்வார், இவர்களுடைய வ்ருத்தாந்தங்களாலும், இந்தக்

(10) இ-ள் மயர்வற மதிநல மருளினன் என்று உபக்ரமத்தில்பகவத் க்ருபையைச்சொல்லி "என்கோலம்மான் திருவருள்" என்று உபஸம்ஹாரத்திலும் க்ருபையைச் சொல்லுகிறபடியாலே "மாலேயேறி மாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன்" என்கிறபடியே பகவத்க்ருபையாலே தரித்திருக்கிற ஆழ்வாருடைய பக்திக்குக்காரணமான பகவத்க்ருபையே ஆழ்வார் ஈசுவரனுடைய திருவடியைச் சேருகைக்கு ஸாதநம் என்றவாறு.

(11) இ-ள் நித்ய விபூதியிலிருக்கிற பாஞ்சஜன்யாழ்வான், திருவாழியாழ்வான், நந்தக முதலான பஞ்சாயுதங்கள் ஈசுவரனிடத்திலிருக்கிற ப்ரேமாதிசயத்தாலே ரக்ஷகனை ஈசுவரனிடத்தில்ரக்ஷ்யத்வபுத்தியைப் பண்ணி அத்தாலே அவனுக்கு மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டிருப்பார்கள் என்பதாம்.

(12) இ-ள் மஹாமதியான விதுரர் தன்னுடைய க்ருஹத்தில் க்ருஷ்ணனுக்கு தான்ஸமர்ப்பித்த ஆசனத்தை, துர்யோதனனுடைய ஸஹவாஸ தோஷத்தால் துர்யோதனனைப்போல் தானும்பொய்யாஸனம்போட்டிருக்கலாமென்று கலங்கி தடவிப்பார்த்தார் என்றபடி



கலக்கம் வருவதுமிகவும் ஸங்கதமாம், (13) "ஜ்ஞாந விபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்று ஸ்ரீ வசன பூஷணத்தில் இந்த அர்த்தம் நிரூபிக்கப்பட்டது.

இப்படி ஸர்வேசுவரன் ஒருஹேதுவையும் அபேக்ஷியாமல் கேவலம் தன்னுடைய க்ருபையாலே சில வ்யக்திகளைக் கடாக்ஷித்தால் அவனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யம் வாராதோ வென்னில் வாராது. எப்படியென்றால் ஈசுவரனை உள்ளபடி அறிவிக்கிற ப்ரமாணங்கள் அவன் நிரங்குசஸ்வதந்த்ரனென்றும், அந்த ஸ்வாதந்திரியத்தாலே சிலவ்யக்திகளை நிர்ஹேதுகமாக கடாக்ஷிக்கிருனென்றும் சொல்லியிருப்பதால் தர்மிக்ராஹக மானத்தாலேவைஷம்ய நைர்க்ருண்ய தோஷங்கள் வரப்ரஸக்தியில்லை.

ஆனுல் (14 "வைஷம்ய நைர்க்ருண்யேந ஸாபேக்ஷத் வாத்" என்கிற ஸூத்ரத்தில், சேதனனுடைய கர்மாவை யபேக்ஷித்து ஸுகதுக்கங்களை சேதனனுக்கு ஈசுவரன் கொடுப்பதால் வைஷம்ய நைர்க்ருண்யங்கள் இல்லையென்று பரிஹரித்ததோடு விரோதியாதோ வென்னில்? கீழ் நிர்ஹேதுகமாகக் கடாக்ஷிக்கிருனென்பதற்கு ப்ரமாணங்களாகக் குறிக்கப்பட்ட வாக்கியங்களுக்கும் "வைஷம்ய நைர்க்ருண்யே" என்கிற ஸூத்ரத்துக்கும் விரோதமில்லாமல் அதிகாரி பேதேந வ்யவஸ்தை பண்ணியிருப்பதால் தோஷமாகாது

அதுவுமன்றி "வைஷம்ய நைர்க்ருண்யே" என்கிற ஸூத்ரத்தில் பண்ணியிருக்கிற வைஷம்ய நைர்க்ருண்யபரிஹாரம் ஸ்ருஷ்டி விஷயமென்று சில வாசார்யர்களபிப்ராயம். இப்படி இந்த ஸ்வாதந்த்ரியத்தை (15) "ஸ்வாதந்த்ர்ய மைச்வர மபர்யநுயோஜ்ய மாஹு:" என்று ஆழ்வானருளிச்செய்தார். இப்படியே ஆசார்யஹ்ருதயத்

(13) இ-ள் ஜ்ஞாநத்தினுடைய பரிபாகத்தாலேவரும் அஜ்ஞானம் மிகச்சிறந்த தென்றபடி.

(14) இ-ள் கர்மாவை அபேக்ஷித்து ஈசுவரன் சேதனர்களுக்கு ஸுகதுக்கங்களைக் கொடுப்பதால் ஒருவனுக்கு ஸுகத்தைக்கொடுக்கையும் ஒருவனுக்கு துக்கத்தைக் கொடுக்கையுமாகிற பாரபக்ஷ தோஷமில்லை என்பதாம்.

(15) இ-ள் ஈசுவரனுடைய ஸ்வாதந்த்ரியமானது உபங்மென்றும் அநுபங்மென்றும் விசாரிக்கத்தக்கதன்று என்பதாம்.

திலும், (16)"பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை யாராயாது" என்று அருளிச்செய்திருக்கிறார்

இப்படியே ஸ்ரீ பாஷ்யத்தில் ரசனுநுப பத்யதிகரணத்தில் (17) "ப்ராதிகூல்ய நிவ்ருத்தி மாத்ரேண அநந்தா பராதாந நாத் ருத்ய ஸ்வப்ராப்திஹேதுஷு ருசிம்ஜநயதி" என்று ப்ராதிகூல்ய நிவ்ருத்தியே பற்றாசாக ஈசுவரன் தன்னையடைய ஸாதனங்களான உபாயங்களில் ருசியையுண்டு பண்ணுகிறான்; என்றிருப்பதாலும், (18) "நிதானம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்றும், (19) "அவ்யாஜ வித்தமநபாய முபாய:" என்றும், (20) "நிருபதி ஸௌஹ்ருதம்" என்றும், வேதாந்த தேசிகன் அருளிச்செய்தார்.

---

(16) இ-ள் ராஜாவில்லாத தேசத்தில் யானையானது யாரையாவது ஒரு ராஜஸிம்மாசனத்தில் கொண்டு வந்து வைத்தால் அது விசாரிக்கத் தகாதது போலேயும், ராஜாவானவன் நிக்ருஷ்டனு யிருக்குமொருவனை தன்னுடைய இச்சையாலே உத்க்ருஷ்டனுக்கிவைத்தால் அதுவும் விசாரிக்கவொண்ணுது போலேயும், ஸர்வேசுவரன் தன்னுடைய இச்சையாலே நித்ய ஸம்ஸாரிகளிலொருவனை நித்ய ஸூரிகளோடு ஒரு கோவையாகச் சேர்க்குமது விசாரிக்கத்தக்கதன்று என்பதாம்.

(17) இ-ள் சேதனனுக்குத் தன்னிடத்தில் ப்ராதிகூல்யமில்லாமையே பற்றாசாகக்கொண்டு இவன் பண்ணின அளவில்லாத அபராதங்களைக் காணுக் கண்ணிட்டு தன்னையடைகிறதற்கு ஸாதனமான உபாயங்களில் ருசியை உண்டாக்குகிறான் என்பதாம். (இதுவும் ஸ்வாதந்த்ரியத்தில் ஒருவகை)

(18) இ-ள் ஸர்வேசுவரன் உபநிஷத்துக்களில் தன்னுடைய ப்ராப்திக்குத்தானே உபாயமாகச் சொல்லப்படுகிறான். அவனுடைய ப்ரஸாதத்துக்கு ஸாதனமாக பக்திப்ரபத்திகள் சொல்லப்பட்டன. அந்த பக்திப்ரபத்திகளை இவனனுஷ்டிப்பதற்குக்காரணம் இவனுடைய யாத்ருச்சிக ஸுக்ருதங்கள், அதற்குக் காரணம் ஸ்ருஷ்டிகாலத்தில் இவனுக்குக் கரணகளேபரங்களைக் கொடுத்து ஜ்ஞானம் முதலானதையும் கொடுத்தவனும் ஸர்வத்தையும் ஸ்ருஷ்டிக்கவல்லவனுமான ஸர்வேசுவரன் என்பதாம்.

(19) இ-ள் ஒருவ்யாஜத்தையும் அபேக்ஷியாமல் அபாயமில்லாத உபாயமாக உம்மைச்சொல்லுவார்கள் என்பதாம்.

(20) இ-ள் ஒருவ்யாஜத்தையும் அபேக்ஷியாமல் ஸுஹ்ருத்தாயிருக்கிறவனை என்பதாம்.

# ஆழ்வார்.

—————:O:—————

இங்கு ஆழ்வாரென்ற சொல்லின் பொருளும் சொல்முடிவும் ஆராயப்படும்.

இப்பெயர் இவர்களுக்கு ஸர்வேசுவரன் மயர்வற மதிநல மருளப்பெற்றகாலமுதல் வழங்கப்பட்டதென ஊகிக்கக்கிடக்கின்றது. "மயர்வற மதிநல மருளினன்" என்பதற்கு அஜ்ஞாநம் நீங்க விசேஷ ஜ்ஞானத்தைக் கொடுத்தான் என்று பொருள். மதிநல மருளினன்- பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைக் கொடுத்தான் என்று ஈட்டில் பொருளுரைக்கப் பட்டதேயெனின்? பக்திரூபாபந்நஜ்ஞாநமும் ஜ்ஞாநவிசேஷ மாதலால் இதிலே அப்பொருளடங்கு மெனக; "கற்பக் கழிமடமஃகும்" என்றபடி தம் பிரயத்னத்தினால் நூல்களைக் கற்று அதனால் அஜ்ஞாநம் நீங்கப்பெற்றவர்கட்குத்தாம் ஓதியது ஒழிய ஓதாதது தெரியாது. அவ்வாறன்றி இவர்கள் ஸர்வேசுவரனுடைய அருளினால் அஜ்ஞானம் நீங்கப்பெற்றவர்களாதலால் இவர்களுடைய ஜ்ஞாநம் பிறருக்குத் தெரியாமல் ஆழ்ந்து மறைந்துகிடக்கிற எல்லாப்பொருள்களையும் ஆழ்ந்தறியும் தன்மையுதாயிருக்கும். ஆழ்ந்தறியும்அறிவைஉபகரணமாகக் கொண்டவர்களாதலால் இவர்கள் ஆழ்வார்கள் என்று பெயர் படைக்கப் பெற்றார்கள். ஆழ்ச்சி அறிவின் மேலது அறிவினது ஆழ்ச்சி அறிவுடையுடையார் மேலேற்றப்பட்டது. அறிவுக்கு ஆழ்ச்சியாவது அறிதற்கரிய பரபிருஹ்ம வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்கை. பின்னர் இச்சொற் பொருளை உதாரணவாயிலாக விளக்கலாகும்.

இனிமணவாள மாமுனிகள் அருளிச்செய்த உபதேசரத்தின மாலையைக் கருவியாகக் கொண்டு ஆராய்ந்தாலும், ஆழ்வார் என்ற பெயர் இவர்களுக்கு மயர்வறமதிநலம் அருளப்பெற்ற காலமுதல் வழங்கப்பட்ட தென்பதை யறியலாம்.

மங்களாசாசனத்தில்மற்றுமுள்ளாழ்வார்கள்
தங்களார்வத்தளவுதானன்றி—பொங்கும்
பரிவாலேவில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான்பெற்றான்
பெரியாழ்வாரென்னும்பெயர்

இப்பாட்டால் விஷ்ணு சித்தராகிய பட்டர்பிரான் பரதத்வ நிர்ணயஞ்செய்த பிறகு பாண்டியனல் நன்குமதிக்கப்பட்டு நகர்வலம்வருகிற காலத்தில் கண்ணுக்குப் புலனாகாத பரவஸ்துவானது எல்லார் கண்ணுக்கும் தோன்றும்படி விளங்கியது. அதைக்கண்ட இவர் அடங்காத அன்புடையவராய், "பல்லாண்டு" என்று மங்களாசாசனம் செய்தார். ஆதலால், இவருக்குப் பெரியாழ்வார் என்ற பெயர் வழங்கப் பெற்றது என்று சொல்லப்படுகிறது. இதனுல் "மயர்வறமதி நலமருளப்பெற்ற காலமுதல் இவர்களுக்கு இப்பெயர் உண்டாயிருந்த தென்பதை நன்கறியலாம்.

பண்டைக்காலத்தில் வேதங்கள் இன்னின்னர்களுக்கு இன்னின்னது உரியதாம் என்ற விபாகமின்றிக் கலந்துகிடந்தன. அக்காலத்தில் தபோசக்தியாலும், ஆயுள் விர்த்தியாலும், எல்லாரும் எல்லாவற்றையும் கற்கும்படியா யிருக்கும். ஜ்ஞானசக்தியாதிகள் குறைவுபட்ட கலிகாலத்தில் ஒவ்வொருவரும் எல்லாவற்றையுங் கற்றற்கியலாது அவைலுப்தமாம் என்பதைத் திருவுள்ளம்பற்றி வேதவியாஸபகவான்அவற்றை ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என வகுத்து அத்யேதாக்களையும் பிரித்தருளினார். அதனுல்அவர்வேதவியாஸர் எனப்பெயர் பெற்றார். அதுபோல ஆழ்வார்களும், ஸர்வேசுவரனுடைய அருளினுல் ஆழ்ந்துணருமறிவைப் பெற்றுவேதமாகியகடலில்ஆழ்ந்து கிடந்த அத்யந்த ஸாரதமமான மந்த்ர ரத்னார்த்தவிசேஷங்களை ஸங்க்ரஹித்து உலகிற்கு உபகரித்த காரணத்தால் இப்பெயர்பெற்றார்களென் றறியலாம்.

ஆழ்வார் என்ற சொல்லுக்குப் பூர்வாசார்யர்கள் ஸர்வேசுவரனுடைய கல்யாணகுணங்களில் ஆழங்கால்படுமவர்கள் என்று பொருள் அருளினர்களேயெனின்? இங்கு ஆழங்கால்பட்டவர்கள் என்றதுஆழங்கால்படும் அறிவையுடையவர்க ளென்றவாறு. அறிவு இங்குத்தொக்கு நின்றது. ஸர்வேசுவரன் குணங்களில் ஆழங்கால்படும் அறிவாவது வேதத்தாலும் பரிச்சேதித்து அறியவொண்ணுத ஸர்வேசுவரனுடைய ஸமஸ்த குணங்களையும் அவனருளால் [illegible]ந்து அநுபவிக்கும் ஜ்ஞானம் என்க. இக்கருத்துப்பற்றியே நம்பிள்ளையும், "பகவதாநந்தத்தைப் பேசப்புக்க வேதங்கள் மநுஷ்யாநந்தம் தொடங்கி ப்ரஹ்மாநந்தத்தளவுஞ் சென்று, பின்னையும்



வவருகேயுத் பிரேக்ஷித்துச் கோண்டு சென்றுபின்னையும் பரிச்சேதிக்கமாட்டாதே "யதோவாசோநிவர்த்தந்தே" என்றுமீண்டனவிறே. இதுஆநந்த குணமொன்றினு மிறே குணங்களெல்லாம் இப்படியிறே இப்போது இக்குணங்களெல்லாம் நிலமாகப் பேசுகிறாரிறே இவர்" என்று அருளிச்செய்தார்.

"தெருளுற்றவாழ்வார்கள்சீர்மையறிவாரார்
அருளிச்செயலையறிவாரார்—அருள்பெற்ற
நாதமுனிமுதலாநல்தேசிகரையல்லால்
பேதைமனமேயுண்டோபேசு"

இப்பாட்டில் தெருளுற்ற ஆழ்வார்களென்பதற்குப் பிள்ளைலோகஞ்சீயர் தெளிந்த ஆழ்ந்தவறி வினையுடையா ரென்ற கருத்துப்பொருளமைய வியாக்யானம் அருளிச்செய்தார். அதுவருமாறு "தெருளுற்ற வாழ்வார்கள் சீர்மையறிவாரார்" மயர்வற மதிநலமருளப்பெற்றவை எல்லாருக்கும் ஒத்திருக்கையிலே "தெருளுற்ற வாழ்வார்கள்" என்றதுவே நிரூபகமாயிருக்கிறபடி "ஜ்ஞாநாநந்த மயஸ்த்வாத்மா சேஷோ ஹிபரமாத்மந:" என்னுமாப்போல அவன் பிரஸாதத்தாலே ":உணர்வுமுயிரு முடம்புமற்றுலப்பிலனவும் பழுதேயாமுணர்வைப் பெற்று" என்றும், "உணர்வெனும் பெரும்பதந்தெரிந்து" என்றும், "மெய்ம்மையை மிகவுணர்ந்து" என்றும் ":தாமரை யாள்கேள்வ னொருவனையே நோக்குமுணர்வு" என்றும், "உணர்ந்தமெய்ஞ்ஞானியர்" என்றும், "ஜ்ஞாநிநஸ்தத்வதர்சிந:" என்றும் சொல்லுகிறபடியே தத்வயாதாத்ம்யதர்சிகளாய் அத்தால் "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்றும், "அறிவாருயிரானாய்,,என்றும், சொல்லுகிறபடியே ஈசுவரனுக்குத் தாரகமாய் ஜ்ஞாநிநாம் அக்ரேஸரா யிருக்குமவர்கள்,, என்பது இவ்வியாக்யானத்தில் தெளிந்த ஆழ்ந்த அறிவினையுடையாரென்பதற்குச் சிலபிரமாணங்களால் விளக்கிக்காட்டினர். அப்பிரமாணங்களால் போந்த பொருளாவது தத்வத்ரயத்தையும் ஸர்வேச்வரனுடைய அருளினுல்உள்ளபடியறிந்து தெளிந்த அறிவையுடையார்கள் எனபதாம்.

ஆழ்வார்கள் ஆழ்ந்தவறிவின யுடையாரென்பதை அவர்கள் அருளிய பிரபந்தங்களை யுற்றுநோக்குவாருக்கு நன்குபுலனகும் அவர்கள் பிரபந்தங்களும் ஆழ்ந்தறியத்தக்க அபிப்பிராய கெர்ப்பமுடைய சொன்னயம் பொருள் நயமுடையவாய் விளங்கும்; ஆகையாலன்றோ இவர்களின் பிரபந்தங்களுக்கு ஈறுயிரப்படி, மூவாயிரப்

படி, நாலாயிரப்படி, ஆருயிரப்படி, ஒன்பதிஞயிரப்படி, பன்னீரா யிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாருயிரப்படி, ஸ்வாபதேசம், அந்யாபதேசம், எனப்பல வ்யாக்யானங்கள் தோன்றின. இவ்வியாக்யானங்களைக் கருவியாகக்கொண்டு இவர்கள் அருளிச்செய்த பிரபந்தங்களை ஆராய்ந்தாலன்றி அவற்றின்பொருள் இனிதுவிளங்க மாட்டாவாம்.

இனி ஆழ்வாரென்ற சொற்பொருள் மேற்காட்டியதற்குப் பொருந்த சிலஉதாரணங்களால் விளக்கிக்காட்டப்படும். அவையும் இங்கு நோக்கத்தக்கனவேயாம்.

சிறுமாமனிசர்-வடிவுசிறுத்துப் பிரபாவத்தால் கனத்திருக்குமவர்கள் என்றுபொருளுரைக்கப் பட்டிருக்கிறது. இங்கு, மாமனிசர் என்பதற்குப்பெரிய அறிவினையுடைய மனிசரெனப் பொருள் கொண்டார்கள். இதைக்குறித்துப்பட்டர் தம்பால்யதசையில்ஆழ்வாரை நோக்கி, "சிறுமைபெருமையாகிய விருத்ததருமத்வயத்திற்கு ஏகதர்மியில் சமாவேசம் கூடினபடி எங்ஙனே? என்று கேட்க, நம்மோடொக்க அன்னபாநாதிகள் தாரகமென்னலாய், பகவத்விஷயத்தில் அவஹாகனம் பார்த்தால் நித்யஸூரிகளோடு ஒப்பாவார்கள் என்னலாயிருக்கிற ஆண்டான் அருளாளப்பெருமாள் எம்பெருமானர் ஸ்ரீகோவிந்தப்பெருமாள் இவர்கள்காண்சிறுமாமனிசராகிறர்" என்று அருளிச்செய்தார்.

தமிழ் உரையாசிரியருள் "தெள்ளுபரிமேலழகர்" என்றுயாவராலும் கொண்டாடப்படுகிற பரிமேலழகர் திருக்குறள்"இறைமாட்சி" என்ற அதிகாரத்தில் அதிகாரப்பொருளை விளக்குமிடத்து "திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும்'' என்றுபெரியாரும் பணித்தார்' என்றுகூறினர். இங்கு ஆழ்வார் பணித்தாரென்று சொல்லவேண்டிய விடத்தில் அவ்வாழ்வாரின் பரியாயப்பெயராகிய பெரியார் என்ற பெயரினல் வழங்கினர். நல்லறிவுடையவர்களைப் பெரியாரென்று இட்டுவழங்குதல் உலகவழக்கு. அவ்வழக்குப்பற்றிப் பரிமேலழகர்இங்கு ஆழ்வாரைப் பெரியாரென்று வழங்கினரேயன்றி; ஆழ்வாரின் பரியாயப்பெயராக வழங்கினரென்று எவ்வாறு கொள்வதெனின்? பரிமேலழகர்மேற்கோள் காட்டும் பிறவிடங்களெல்லாம் பிறர் கூறுவர், பிறர் கூறுவர்என்று சொல்லிப்போந்து இவ்விடத்தில்மாத்திரமே "பெரியாரும் பணித்தார்" என்று கௌரவித்துக் கூறுகின்றாராதலால் இது ஆழ்வாரென்ற பெயரின் பரியாயப் பெயரென்றறியலாம்.



பெரியார்—பேரறிவினையுடையார்; என்றுபொருளில்பெருமை பகுதியாய் நின்று அறிவு தொகுத்து பெருமை அறிவுடையார்மேலதாக, ஆர்விகுதிகூட்டிப் பெரியார் என்று முடிக்கப்பட்டது. அவ்வாறே ஆழ்வார்-ஆழ்ந்த அறிவினையுடையார் என்னும் பொருளில் ஆழ் பகுதியாக்வைத்து, அறிவைத்தொகுத்துப் பொருளின துஆழ்ச்சி அறிவின் வாயிலாய் அறிவுடையார் மேலதாக ஆர்விகுதி கூட்டி ஆழ்வாரென நின்றது.

வேதத்தைக் கடலாகவும், காடாகவும், உருவகஞ்செவ்வார்கள். இவற்றை முறையே வேதசாகரம் என்றும், வேதாரண்யம் என்றும் வழங்கிவருவதினும் அறியலாம். கடலாக உருவகஞ்செய்வார் அதற்கேற்றபடி அதில் அவஹாகித்தறியும் அறிவை அவகாஹனஞ்ஞானம் என்றும். ஆழ்ந்தவறிவென்றும் கூறுவர். இவ்வறிவிற்கு எதிர்த்தட்டான அறிவை மிதந்தவறிவென்றும்,மேலெழுந்தவறிவென்றும் வழங்குவர். ஆரண்யமாக உருவகஞ்செய்வார் அதற்கேற்றபடி அதில் ஆராய்ந்தறியும் அறிவை நுழைபுலம் என்றுகூறுவர். "நுண்மாணுழைபுலம்" என்று திருவள்ளுவர் உரைத்ததினும் அறியலாம். இந்நுண்ணறிவிற்கு எதிர்த்தட்டான அறிவை முழுமதி என்றும், மந்தமதிஎன்றும், வழங்குவர். இவ்வாறுவேதத்தை இருவகையாக உருவகஞ் செய்வார்களில் நம் பூர்வாசார்யர்கள் "த்ராவிடவேதஸாகரம்" என்று வேதத்தைக் கடலாக உருவகஞ்செய்து கொண்டார்களாதலால்; அக்கடலுளாழ்ந்தறியும் அறிவுவிசேஷமுடையவர்களை ஆழ்வார்கள் என்று வழங்கினர்கள் எனல் வேண்டும்.

பிராகிருதமான கடலில் ஆழ்ந்துகிடக்கிற மணிப்பிரவாளமுதலிய பொருள்களை எடுக்க விரும்புவார் தங்கள் பிராகிருதமான சரீரங்களைக் கருவியாகக் கொண்டு அதில் முழுகி அவற்றை அவர்கள் எடுப்பதுபோல இவ்வாழ்வார்கள் அப்பிராகிருதமான வேதஸாகரத்தில் ஆழ்ந்து கிடக்கிற மந்த்ர ரத்னர்த்தவிசேஷங்களைத்தங்கள் திவ்யஜ்ஞானத்தினல் அவஹாகித்து ஸங்க்ரஹித்து உலகிற்கு உபகரிக்குமவர்கள் என்பது திரண்டபொருளாம்.

ப. அ.

# நன்றிமறவாமை.

உலகினர்களுக்கு நல்லவழியைப் பழக்குவிக்கின்ற சாஸ்திரமானது பலதருமங்களை எடுத்துரைத்து அத்தருமங்களை அநுஷ்டிப்பவர்களுக்குப் பிரயோஜனங்கள் உண்டென்பவற்றையும் விளக்கிக்காட்டியது. இந்நன்றி மறவாமையைப் பற்றிக்கூறவந்த விடத்து இது அவசியம் செய்யத்தக்கதென்றும், செய்யாதுவிட்டால் அதனாலுண்டாகும் பாபத்திற்குப் பரிகாரங் கிடையாதென்றுங்கூறியது. இதனால் மக்களாகிய நம்மால்செய்யத்தக்க முக்ய கார்யங்களில்இது முக்யமென்பது பெறப்படும்.

நன்றிமறவாமையாவது-தனக்குப்பிறர்செய்த நன்மையை மறவாமை. இதுபற்றியே ஆழ்வாரும் "அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்பு செய்வித்து, அறியாமாமாயத் தடியேனை வைத்தாயால்" என்று அருளிச்செய்தார். இதன்பொருள் மாயையிற் சிக்குண்டு இன்னது செய்வதென்றறியாது மதிமயக்கங் கொண்டிருந்த காலத்தில் உன்விஷயமான பக்தியைப் பிறப்பித்தாய். இங்ஙனம் நீசெய்த உபகாரத்தையான் என்னென்று புகழ்ந்து சொல்வேன் என்றுகொண்டாடினரென்பதாம். நிற்க சோழன் குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளிவளவன், தன்னிடத்தில் பரிசில்பற்றுச்செல்லுகிற பெரும்புலவராகிய ஆளத்தூர் கிழாரை நோக்கி நீர்நம்மை நினைத்து வருவீரோ என்று கேட்டவிடத்து அவர்;

"ஆன்முலையறுத்தவறனிலோர்க்கு
மாணிழைமகளிர்கருச்சிதைத்தோர்க்கும்
பார்ப்பார்த்தப்பியகொடுமையோர்க்கும்
வழுவாயுமருங்கிற்கழுவாயுமுளவென
நிலம்புடைபெயர்வதாயினுமொருவன்
செய்திகொன்றோர்க்குய்தியில்லென
அறம்பாடிற்றேயாயிழைகணவ,,

என்று கூறினர். இதன்பொருள் அரசனே! கோவதைசெய்த தீவினையாளர்க்கும், சிறந்த ஆபரணத்தையுடைய பெண்டிரது கருப்பத்தையழித்தோர்க்கும் பிராஹ்மணர்களைத் தப்பிய கொடுந்தொழிலையுடையோர்க்கும், அவர் பாதகத்தினை ஆராயுமிடத்து அவற்



றைப்போக்கும் வழியுமுளவெனவும், பூமி, கீழ்மேலாங்காலமானாலும், ஒருவன் செய்தநன்றியைச் சிதைத்தோர்க்கு நரகம் நீங்குதலில்லை யெனவும், தருமசாஸ்திரம் கூறியதென்பதாம். இதனாலும் நன்றிமறவாமை முக்ய தருமம்என்பதும், அதைமறப்பதிலுங் கேடு பிறிதில்லை என்பதும் பெறப்படும். இவ்விஷயத்தைப் பற்றி பீஷ்மாசார்யர் தர்மபுத்திரரை நோக்கிக்கூறிய ஒரு கிளிக்கதையினாலும் அறிக. அதுவருமாறு:—

காசிராஜனுடைய தேசத்தில் ஒருவேடனிருந்தான்; அவன் அநுதினமும் வில்லைக்கையிற்கொண்டு அதனால் மிருகம், பக்ஷி, முதலியவற்றை வதைசெய்து ஜீவித்துவந்தான். ஒருநாள் அவ்வேடன் விஷந்தீட்டல்பெற்றபாணத்தை வில்லிற்பூட்டித்தன் சேரியிலிருந்து புறப்பட்டு, மானைத்தேடி ஒருபெரிய வனத்தையடைந்தான். அவ்விடத்தில் சிலமான்களிருக்கக் கண்டு லக்ஷியம் வைத்துப்பாணந்தொடுத்தான். அப்பாணங் குறிதப்பி அருகிலுள்ள ஒரு பெரிய மரத்திற் சென்றுபாய்ந்தது. அம்மரம் விஷந்தீட்டல் பெற்ற அப்பாணத்தால் தாக்குண்டதினால் அதிலுள்ளகாய்களும், கனிகளும் இலைகளும், உதிர்ந்து விட்டன. அதுவும் உலர்ந்தொழிந்தது. அம்மரப்பொந்தில் அநேகநாளாக வஸித்திருந்த ஒருகிளி 'இந்தமரம் இவ்வளவுகாலம் வரை நமக்கு இடந்தந்தது; இரைகொடுத்துக்காப்பாற்றியது; ஆதலால் இதின் நன்றியை மறந்து நாம் இனிவேறிடங்களுக்குப் போகலாகாதென்று அதிலே வஸித்துவந்தது. அக்கிளிக்கு ஆகாரம் ஒன்றுமில்லாததினால் தன்னுடல் குறுகி குரல் தழுதழுத்து விடமுற்றிருந்தது. இதின் நிலைமையைக் கண்ட இந்திரன் ஆச்சர்யமடைந்து தனக்குள் யோஜிப்பானாயினன். "ஒரு கிளி தன்னை நெடுநாளாகப் பாதுகாத்த மரம் பட்டுப்போயிற்று,, அது அடையுங்கஷ்டத்தை நாமும் அடையவேண்டுமென்ற எண்ணத்தினால் இங்ஙனம் கஷ்டப்படுகிறதே இதனிடத்திலுள்ள செய்நன்றிமறவாமையாகிய குணத்தைப்பற்றி யான் என்னென்று புகழ்ந்து சொல்வேனென்று ஒரு பிராஹ்மண வடிவங்கொண்டு அதின் அருகில் வந்து கிளியே! யான் உன்னிடத்தில் ஒன்றுகேட்க விரும்புகிறேன் என்றான். இவ்வுரை கேட்ட அக்கிளி பிராஹ்மணன் இன்னானெனத் தெரிந்து கொண்டு மிகவணக்கத்தோடு தேவராஜனே யான் உம்மை இன்னாரென்றறிவேனென்றது. இதுகேட்ட இந்திரன் அதன் அறிவுடைமையைத் தனக்குள் வியந்து கொண்டான்.

பிறகு கிளியே! இலைகளும், காய் கனிகளும், உதிர்ந்து பக்ஷிகளுக்கு ஆதாரமற்று வாடிப்போன இம் மரத்தை நீஏன் வீணுகக் காத்துக்கொண்டு வருந்துகின்றாய்; இதோபலமுடைய பலவிருக்ஷங்களிருக்கின்றனவே அவைகளிற் சென்று அவற்றிலுள்ளவைகளையுண்டு சுகமா நவாழலாமே என்று வினவினன். அப்பொழுது அச்சொற்களைக்கேட்ட கிளியானது பெருமூச்சுவிட்டு அறிவுடையீரே! தேவதேவனே! உமக்கு நான் என்னசொல்லப் போகிறேன் நல்ல குணமுடைய இந்தமரத்தில் யான்பிறந்தேன்: இவ்வளவு காலமாக என்னைப்பகைவரினின்று காப்பாற்றி நல்லவுணவுகளைத் தந்ததும் இதுவே; இவ்வளவு பேருபகாரஞ் செய்த இதின் செய்நன்றியை இப்பொழுது மறந்துவிடுவது தருமமா? ஒருவர் செய்தநன்றியை மறவாதிருப்பது தானே தருமங்களிற் சிரியதாகும்; மறந்தால்அதினும் மிக்கதோர் பாபம்பிறிதுஇல்லையே; ஆதலால் எல்லாம்அறிந்த நீர் என்னை இம்மரத்தை விட்டுவிடும்படி கட்டளையிடலாகாது என்றது. இந்திரன் கிளி கூறிய நல்லுரைகளைக் கேட்டுக் களிப்புற்றுக்கிளியை நோக்கி ஏதாவது வரங்கேள் என்றான். அப்பொழுது அந்தக்கிளி தனக்கு உபகாரஞ்செய்த அந்தமரம்செழிப்படைவதே பெரும் பயனுகக்கருதி, இம்மரம் நல்ல செழிப்பை யடையும்படி அருள் செய்யவேண்டுமெனக் கேட்டது. இந்திரன் அம்மரத்தின்மீது அமிர்தத்தைப் பொழிந்தான் உடனே அந்தமரம் முன்னிலும் நல்ல நிலைமையடைந்து செழிப்புற்று ஓங்கியது. பின் அக்கிளியானது செய்நன்றி மறவாமை முதலிய நல்லகுணங்களை மேற்கொண்டொழுகியதினுல் இந்திரலோகஞ்சென்று சுகவாழ்வையடைந்தது. இதனுல் செய்நன்றி மறவாமையின் பெருமையும், அதை யாவரும் கைக்கொண்டொழுக வேண்டுமென்ற இன்றியமையாமையும் விளங்கின.

இவற்றால் ஸ்தாவரந் தொடக்கமாக ஸர்வேசுவரனளவும் அடைந்து ஒவ்வொருவரும் பெறும் பிரயோஜனங்களுக்கு நன்றி பாராட்டவேண்டுமென்று காட்டப்பட்டது.



# ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தம் அநாதி.

(132-ம் பக்கத்தொடர்ச்சி).

ஆகையால் பிரபந்த சப்தார்த்தத்தைக் கீழே சொல்லியபடி தெரிந்துகொண்டு, ஆழ்வார்களுடைய உக்திகளை உற்றுநோக்கும்போது அவையே அந்தத் திவ்யப்பிரபந்தங்களாமென்று நன்று தெரியலாம். இன்னும் அம்முனிவர்கள் கூறியவற்றுள்* "சிருண்வந் ஸுபத்ராணி ரதாங்கபாணே: ஜந்மாநி கர்மாணிச யாநிலோகே கீதாநிநாமாநி ததர்த்தகாமாநி காயந்விலஜ்ஜ: விசரேதஸங்க:" என்று சொல்லி யிருக்கிறார்கள். இதனுல், திவ்யப்ர பந்தங்களையே போதுபோக்காகக் கொள்ளவேணுமென்று உபதேசிக்கப்படுகிறது. இங்கு காநம்பண்ணப்பட்டகுணகர்ம ஜந்மங்கள் என்பதை நோக்குங்கால் கீழேசொன்ன பிரகாரம், எம்பெருமானுடைய குணகர்ம ஜன்மங்களைப் பிரதிபாதிக்கிற திவ்யப் பிரபந்தங்களையே சொல்லியதாகக் கொள்ளவேண்டும். "நாமாநி ததர்த்தகாநி" என்பதும் "யாநிநாமாநிகௌணுநி" என்று திருநாமங்கள் குணங்களடியாக வந்தவையாகையால் குணங்களையே காட்டியதாகவேணும் "சிருண்வந்" என்கையால் ஆசார்யனிடத்தில் அப்பிரபந்தங்களை அத்தியயனம் செய்துபெற வேண்டுமென்பதும் காட்டப்பட்டிருக்கிறது. "காயந்" என்கையால், அதன் அநுஸந்தானமிருக்கும் படியையும், அதுதான் ப்ரீதியுள்ளடங்காமல் வருவதென்பதையும், சுகரூபமாயிருக்குமென்று தோற்றுகையாலே போகரூபமா யிருக்குமென்பதையும் காட்டிற்று. "விசரேத்" என்கையாலே அவ்வநுஸந்தானத்தால் காலக்ஷேபம் பண்ணக்கடவதென்பதும் தோற்றுகிறது.

ஆனுல் இந்த சுலோகத்துக்கு இவ்வளவுஅர்த்தம் கொள்ளஇடமேதென்னில்? இவர்கள் சொல்லும் உபாக்கியானத்தின் ஆதியில் பாஞ்சராத்ரதர்மம் சொல்லப்பட்டிருக்கிறது. நடுவில் பாஞ்சராத்ரவிதியை அநுஸரித்த ஆராதனம் பிரஸ்தாபிக்கப்பட்டது. முடிவில் பாஞ்சராத்ரதர்மத்தைக் கைக்கொண்ட ஆழ்வார்கள் அவதாரத்தை ஸூசிப்பித்து கிருதயுகத்திலுள்ளாரும் கலியுகத்தில் பிறப்பை விரும்புகிறார்கள் என்றுசொல்லி முடித்திருக்கிறது. அப்படி

*இ-ள்—லோகத்தில் கானம்பண்ணப் பட்டனவாயுள்ள பகவதவதாரகுண சேஷ்டிதங்களைக் கேட்டுணர்ந்து லஜ்ஜையைவிட்டுப் பாடிக்கொண்டு பற்றற்றவனுகப் பொழுது போக்கவேண்டும் என்பதாம்.

விரும்புகைக்கு அடி திவ்யப்ரபந்தத்தை வெளியிட்ட நாராயண பராயணராகச்சொல்லப் பட்டுள்ள ஆழ்வார்களுடைய அவதாரமே யாகவேண்டுகையாலும், உயர்ந்ததாயுள்ள இந்ததர்மத்தை அநுஷ்டிக்கத் தகுந்த அதிகாரிகள் துர்லபராயிருப்பார் என்பதுபற்றி, "கலிகாலத்திலன்றோ அவதரிக்கப்போகிறார்கள்" என்று ஆதரித்துப் பேசினமையாலும், நடுவில், கானம் பண்ணப்பட்டகுண கர்மங்கள் என்றது திவ்யப்பிரபந்தங்களிற் சொல்லியவையாம். ஆகவே ஆதிமத்யாந்தங்களிற் பாகவததர்மத்தை ஆதரித்துப் பேசிய ஐதிஹ்யத்தை உற்றுநோக்குங்கால் ஆர்ஷபர்களான ஜாயந்தேயர்களால் இந்த தர்மங்கைக்கொள்ளப்பட்டதென்றும், இதுஅநாதியென்றும் விளங்கும்.

இனி நிமியும் இந்ததர்மத்தை அநுஷ்டித்து முக்தியடைந்தாரென்று, நாரதர், கதையை முடித்திருக்கிறார். ஆகையால் நிமிசக்ரவர்த்தியும் வைஷ்ணவனும். இனிவசுதேவர் இதில் ஆசைகொண்டு கேட்டபடியால் அவரும் இதை அநுஷ்டிப்பவராவர். உபதேசித்த நாரதருக்கு ருத்ரன்ஆசார்யனாக வேணும். அஹிர்புத்நிய ஸம்ஹிதையில், ப்ரபத்திஸ்வரூபத்தை நாரதர் ருத்ரனை நோக்கிப்ரச்நம் பண்ண, ருத்ரன் நாரதரைப் பார்த்து நீ எனக்கு பக்தனும், சிஷ்யனும், இஷ்டனுமாயிருக்கையால் உனக்குச் சொல்லாதிருக்க வொண்ணாது; ஆகையாலே சொல்லுகிறேன், என்று தொடங்கி ப்ரபத்தியை அதற்கு வேண்டிய விஷயங்களோடு உபதேசித்ததாகச் சொல்லியிருக்கிறது.

ஆனால் ருத்ரன் வைஷ்ணவ சின்னங்களைத் தரித்துக் கொள்ளாதிருந்தாலும் கீழேகண்ட காரணத்தால் வைஷ்ணவர்களுக்கு முக்கியமாயுள்ளப்ரபத்திமார்க்கத்தையும் யுபதேசிக்க நாரதர்பெற்றுக் கொண்டமையால் ருத்ரனுக்கும் வைஷ்ணவத்வம் உண்டென்றே கொள்ளவேண்டும். வெளிப்படையான வைஷ்ணவ சின்னங்கள் அந்யருடைய சம்சயத்தைப் போக்குவதே ப்ரயோஜனமாகக் கொள்ளப்படுவதால் அதில் ஊற்றமுடைய அதிகாரிகளுமுண்டு; அந்யர்கள் எப்படி நினைத்தால் என்ன என்றுகொண்டு அதில் ஊற்றமில்லாதாருமுண்டு; அன்றியும் அவர் அதிகாரிபுருஷராகையால் அதற்கேற்ற தாபசவேஷத்தைக் கொள்வதும் விரோதமாகாது. அவர் அநுக்ரஹத்தை விரும்பி உபாஸிக்குமவர்கள்தரிக்கும்



வெளிப்படையான வேஷமும் தத்ரூபமாகவே யிருந்துகொண்டு வருவதும் தவறுகமாட்டாது.

ஆனால் அவருள் ஒரு சிலர் பரதத்துவவிஷயத்தில் வைஷ்ணவரோடு மாறுபட்டிருப்பதும் கூடும்படிஎங்ஙனே யென்னில்? வைஷ்ணவர்களுள்ளும் சிலர் விஷ்ணுவை அநாதரித்து ஆசாரியனையே தெய்வமாக வைத்துக்கொண்டாடுவதுபோல "ஆலமரநீழல்அறம் நால்வர்க்கன்றுரைத்த" துபற்றி ஆசாரியப்பிரதிபத்தியாற் கொண்டாடுதலாகவேணும், அல்லது அவருடைய அபிப்பிராயத்தை உள்ளபடியே அறியாமையாலேனு மிருக்கலாம்.

உயர்ந்ததாயுள்ள வைதிக முறையைக் கொண்டவனுகப் பாகவதத்தில் கொண்டாடப்படுகிற 'அர்ஹத்' என்னுமரசன் வெளிப்படையான வேஷத்தில் உள்ளம் பற்றுதிருந்தகாரணத்தால்அவன் கொண்டிருந்தவேஷத்துக் கேற்றபடி ஒருமதத்தைக் கற்பித்து ஆர்ஹதமதமென்று பெயரிட்டு அவனைச் சார்ந்தவர்களால் வழங்கப்பட்டதென்று பாகவதத்தில் விரிவாகக்காணலாம்; இங்கும்அது போலுமிருக்கலாம்.

சில ஆசார்யர்கள் ஸிஷ்யனுடைய ஆஸ்திக்யத்தை சோதிக்க வேண்டி தம்முடைய அபிப்ராயத்தை உள்ளபடி முதலிற்சொல்லுகிறதில்லை. இந்தவிஷயத்தைப்பின்வரும்விருத்தாந்தத்தாலறியலாம். பிர்மாவினிடம் இந்திரனும், விரோசனனும் ஆத்மோபதேசம் பெறுவதற்குப்போக பிருஹ்மா தேகமே ஆத்மாவென்று உபதேசித்துவிட்டார். விரோசனன் கேட்டுத் திருப்தியடைந்துகொண்டு போய்விட்டான். இந்திரன் மட்டும் அதில் திருப்தியடையாமல் முப்பத்திரண்டு வருஷம் குருகுலவாஸம் செய்து பின்பு உண்மையான அர்த்தத்தை உபதேசிக்கப்பெற்றானென்று சாந்தோக்யத்திற் சொல்லி யிருக்கிறது.

இங்கும் அதுபோலத்தம் அபிப்பிராயத்தை உள்ளபடி அறிவிக்காமையால் வெளிப்படையான வேஷத்துக்குத் தக்கபடி ஒரு ஸித்தாந்தத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கலாம். ஆனால் இப்படியான அந்யதாஸித்தி உபயபக்ஷத்துக்கும் பொதுவாகமாட்டாதோ வென்றால், ருத்ரன் நாரதருக்கு உபதேசித்தவிடத்தில் இது ரஹஸ்யம், நீ பக்தன், இஷ்டன், ஆகையால் உனக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லிக்கொண்டுவிஷயம் தொடங்குவதாலும், இப்படியே வைஷ்

ணவமான தத்வோபதேசங்களெல்லாம் கேள்வி பொதுப்படை யாகவும் வைஷ்ணவமான உத்ரம் சிறப்பாகவும் வந்திருப்பதாலும் அவைஷ்ணவமான தத்துவநிச்சயசாஸ்திராரம்பங்களில் அவ்வாறில்லாமையாலும், இங்குச்சொல்லிய அங்கஙஷித்தி வைஷ்ணவ விஷயத்தில் வருவதில்லையென்று கண்டுகொள்ளலாம். இந்த யுக்திகளைக் கொண்டு வைஷ்ணவத்துக்கு விரோதமில்லாமலே ருத்ரன் தன் பரிகாங்களுக்கு அவைஷ்ணவதர்மங்களை யுபதேசித்திருக்கு மவைகள் ஆராய்ந்து கொள்ளவும். ஆகையால் ருத்ரன் அந்தரங்கமாக வைஷ்ணவ தர்மத்தைக் கைக் கொண்டவனென்பதே சாஸ்திர ஸம்மதம்.

இனி, இந்த்ரனும் வைஷ்ணவதர்மத்தை மேற்கொண்டவன் என்பது லக்ஷ்மீதந்த்ரத்தில், லக்ஷ்மிதேவியிடம், ப்ரபத்தியைஉள்ள படிகேட்டு நித்ய மனுஷ்டிக்கவேண்டிய கர்மங்களையும், ஏதேனும் நிமித்தம்பற்றிச் செய்யவேண்டிய கர்மங்களையும், பல ஷித்தியில் ஆசைகொண்டு செய்யத்தகும் கர்மங்களையும் இந்த தர்மத்தில் ஊற்றங்கொண்டவன் அநுஷ்டிக்க வேண்டிய ப்ரகாரத்தையும் தெளிவாகத் தெரிந்து கொண்டானென்று சொல்லப் பட்டிருப்பதால் அறியலாம்.

இன்னும் உபரிசரவஸு பாஞ்சராத்ரதர்மத்தை அனுஷ்டித்தவன் என்பது மஹாபாரதத்திற் காணலாம். வைஷ்ணவ தர்மாநுஷ்டானமான முறைகளைத் தெளிவாகக்காட்டும் ஸ்ம்ருதிகளைச் செய்தவர்கள் ஸ்ரீபராசரபகவான், சாண்டில்யர் முதலானவர்கள் பலருளர். அகாதிமஹர்ஷிகள் ப்ரபன்னராயுள்ளவர்களும்பலருளர். இவர்களுடைய வ்ருத்தாந்தங்களை இங்குவிரிவஞ்சிவிரித்துரைக்கவில்லை.

இப்படிப்ரதானர்கள் பலராலும், ஆதரத்தோடு அங்கீகரிக்கப்பட்ட வைஷ்ணவம் அநாதி என்பதற்கு ஐயமில்லையாகவும், ராமாநுஜமத மென்கிறவ்யவஹாரம்கூடும்படி எங்ஙனேயென்னில்? இந்த மதம் ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொரு தேசங்களில் சில உத்தமாதிகாரிகளால் அநுஷ்டிக்கப்பட்டு ப்ரபலமாய் நாடெங்கும் பரவியெல்லாராலும் அநுஷ்டிக்கப்படாமல் மறைவாயிருந்தது. "தசதாசா:" "தசார்ஹா:" என்று உத்தம தர்மத்தைத் தெரிந்தனுஷ்டிக்கு மவர்களும் சிலரே; அதை அநுஷ்டிக்கும் யோக்யதை



யுடையாரும் சிலரே; என்று அஷ்டாவக்ரரும் மஹாபாரதத்தில் சொல்லியிருக்கிறார். இவ்வாறாக அருகியிருந்த வைஷ்ணவ தர்மத்தை எம்பெருமானார் காலத்தில் அவரால் எல்லாருமறிந்து அநுஷ்டித்து உஜ்ஜீவிக்குமாறு எம்பெருமான் திருவுள்ளமுகக்கும்படி நாடெங்கும் பரவச்செய்தார். அதுகொண்டு பெரியபெருமாள் திருவுள்ளமுகந்து அன்றுமுதல் எம்பெருமானார் தரிசனம் என்று வழங்கத்தகுமென்று நியமித்தருளினர்.

"எம்பெருமானார்தெரிசனமென்றேயிதற்கு
நம்பெருமாள்பேரிட்டுநாட்டிவைத்தார்—அம்புவியோர்
இந்தத்தெரிசனத்தைஎம்பெருமானார்வளர்த்த
அந்தச்செயலறிகைக்கா"

என்று இவ்விஷயத்தை மணவாளமாமுனிகளும் அருளிச்செய்தார்.

ஆனால், "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம்" நாதமுனிகள் தொடங்கியுண்டானதென்று வேதாந்ததேசிகர் அருளிச் செய்தது பொருந்தும்படி யெங்ஙனே யென்னில்? இதுக்கு முன்பு ஓரோர் காலங்களில் சில அதிகாரிகளுக்கு இது உபதேசமாய்க் கிடைத்திருந்தும், அது ஆசார்ய பரம்பராப்ராப்தமாய் உபதேசிக்கப்பட்டு வந்ததில்லை. அந்தக்குறைதீருமாறு நாதமுனிகள் ஆழ்வாரை அநுவர்த்தித்துப் பெற்று ஓராண்வழி முறையாகப் பெருக்கி யெம்பெருமானார் வளர்க்க வளர்ந்து இன்றளவாக வரும் முறைக்கு நாதமுனிகள் காரணமானதுகொண்டு "நாதோபஜ்ஞம்ப்ரவ்ருத்தம்" என்றருளிச்செய்தார்.

ஆகையால் எம்பெருமானார் வளர்த்த மாத்திரங் கொண்டு இதற்கு ராமாநுஜமதமெனப் பெயர் வந்தது. அதுகொண்டு இது புதிதெனப் பேசுவது பொருந்தாது. பழமையாய் நின்றதும், நிற்கிறதும், இனியும் அழியாமல்நிற்பதும், யாருக்கும் உரியதாவதும், உய்யும் வகையுணர்த்துவதும் இதுவேயாமென யாருமறியும்படி தெரிந்தவாறு கூறினேன். இதில் உள்ள குறைகண்டு கைவிடாது பெரியோர்கள், யாத்ருச்சிகாதிகளை யேறிட்டு அடிமை கொள்ள நினைக்குமவனுக்கு அடியாராகையால் இதிலுள்ள குணத்தை யேறிட்டு இதை அங்கீகாரத்துக்கு விஷயமாக்குவார்களென்று துணியலானேன்.

இங்ஙனம்

ஸ்ரீ உ. ப. வே. காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி தமையனார் குமாரனும் அந்தேவாஸியுமான

வேங்கடாசாரியார்

சேணங்குளம்.

# வேதாந்த தத்வ விளக்க வினாவிடை.

(93-ம் பக்கத் தொடர்ச்சி).

வினா :-அவ்வாறு க்ரஹிக்கத் தக்கவை எவை?

விடை :-வேதாந்தத்திற் சொல்லப்படும் தத்வங்கள் மூன்றுமாம்.

வினா :-அவை எவை?

விடை :-சித்தும், அசித்தும், ஈசுவரனுமாம்.

வினா :-இந்த தத்வங்கள் மூன்றும் எவ்வாறிருக்கின்றன?

விடை :-இவை மூன்றும் ப்ரகார ப்ரகாரிகள் ஐக்யத்தால் (சரீர சரீரிகளுடைய ஐக்யத்தால்) ஒன்றென்று சொல்லும்படியாய், ஸ்வரூப பேதத்தால் மூன்றென்று சொல்லத்தக்கவையாயிருக்கும்.

வினா :-இந்த மூன்று தத்வங்களைச் சொல்லுகிற பேத சுருதிகள் எவை?

விடை :-"போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா" என்றும், "ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞ பதிர்குணேச:" என்றும் இவை முதலியவிடங்களிற் சொல்லப்பட்டவையாம். இவைகளில் போக்யம், ப்ரதாநம், என்ற சொற்களால் அசித்தும், போக்த்ரு, க்ஷேத்ரஜ்ஞ என்ற சொற்களால் ஆத்மாவும், ப்ரேரிதா, பதிர்குணேச: என்ற சொற்களால் ஈசுவரனும், சொல்லப்பட்டன வென்றறிக.

வினா :-சாந்தோக்ய உபநிஷத்தில் "ஸர்வம் கல்விதம் ப்ருஹ்ம" என்றும், "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீ தேகமேவாத்விதீயம்" என்றும் சொல்லியவற்றால் தத்வம் ஒன்றென்பது பெறப்படும். அவ்வாறிருக்க தத்வம் மூன்றென்று சொல்லுவது எவ்வாறு பொருந்தும்?

விடை :-ப்ரகார ப்ரகாரிகளின் ஐக்யத்தாலே (அப்ருதக் ஸித்தியாலே) ப்ரகாரவாசி சப்தம் ப்ரகாரிபர்யந்தம் போகையாலே "ஸர்வம்ப்ரஹ்ம" என்றும் "ஏகமேவ" என்றும் சொல்லலாம். மேலும் "ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞாத்" என்று ஒன்றையறிந்தால் ஸாவதையும் அறியலாம் என்கிற ப்ரதிஜ்ஞையாலும், "யதா ஸௌம்யேகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயமிதி விஜ்ஞாதம் ஸ்யாத்" என்று களிமண்ணையும், தண்ணிய மணலையும், ஜலத்தையுஞ் சேர்த்துத்துகைத்துப் பக்குவமாகத்திரட்டி வைத்திருக்கிற ஒரு மண்ணுருண்டையை அறியவே



அதின் கார்யமான குடம், கலசம் முதலியவைகளையெல்லாம் அறிந்ததாமாப்போல என்ற த்ருஷ்டாந்தோபபாதகத்தாலும், ப்ரளயஸமயத்தில் (ஸுபாலோபநிஷத்தில்) "ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே" என்று ஆரம்பித்து "தம: பரேதேவ ஏகீபவதி" என்னுமளவாகச் சொன்னதின்படி ஆத்மாக்களடங்கிய அசித்து, பரனிடத்தில் ஜலத்திற் கலந்துகிடக்கும் உப்பைப்போலவும், ஸூர்யகாந்த சந்திரகாந்தங்களிலிருக்கும் அக்நி ஜலங்களைப் போலவும், பூமியிற் புதைந்த விரையைப்போலவும், லயித்திருக்கையில் அந்த ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மத்தையே "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்று ஸத்சப்தத்தாலே சொல்லி ஸ்ருஷ்டி தசையில் "ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி" என்று அந்தஸத்தே ஜகத்தாய்ப்பரிணமித்ததாகச் சொன்னபடியால், ஸ்ருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களெல்லாம் ஸ்தூலசிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமாயிருக்கையாலே (ப்ருஹதாரண்ய கோபநிஷத்தில்) "நேஹநாநாஸ்தி கிஞ்சந" என்று அந்த ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறொருவஸ்து இல்லையென்று நீக்கி "ம்ருத்யோஸ் ஸம்ருத்யுமாப்நோதியஇஹநாநேவ பச்யதி" என்பதனால்சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மவ்யதிரிக்தவஸ்துஉண்டென்றிருப்பவன் ம்ருத்யுவையடைவனென்று ப்ரத்யவாயத்தைச் சொல்லியிருக்கையாலும், ஸதாதி சப்தங்களுக்கு சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மத்தைவிட்டுச் சுத்த ப்ரஹ்மத்தைச் சொன்னால் பேதசுருதிகளுக்கெல்லாம் விரோதிக்கும். "ய:ப்ருதிவ்யாம் திஷ்டந்" "ஆத்மநிதிஷ்டந்" என்று அபேதம் சரீராத்மபாவநிபந்தனமென்று சொல்லுகிற கடக சுருதிகளுக்கும் விரோதிக்கும். சரீராத்மபாவத்தாலே அபேதம் எப்படி ஸித்திக்கிறதென்றால் ஒருவன்தன் சரீரம் பருத்தது இளைத்தது என்று சொல்லவேண்டியதற்கு நான் பருத்தேன் இளைத்தேன் என்று சொல்லுவதுபோலேயும், பிறரும் உன் சரீரம் பருத்தது இளைத்தது என்று சொல்லவேண்டியதற்கு நீ பருத்தாய் இளைத்தாய் என்று சொல்லுவதுபோலேயும் ப்ரஹ்ம சரீரமான சேதநா சேதநங்கள் ஜகத்தாய்ப்பரிணமித்ததை ப்ருஹ்மபரிணாமமாகவே சொல்லத் தட்டில்லை.

ஒருவனுக்கு சேஷமாயிருக்கிற க்ருஹக்ஷேத்ர புத்ர மித்ர களத்ராதிகளைப்போலவும் விசேஷணங்களான தண்ட குண்டலாதிகளைப்போலவும் பிரிந்து நிற்கைக்கும் பிரிந்து தோற்றுகைக்கும் யோக்யமாம்படி யிருக்கையன்றிக்கே, அவ்விரண்டுக்கும் அயோக்யமான சரீரம்போல

சேஷமாயும் அப்ருதக்ஸித்த விசேஷணமாயுமிருக்கை யால் சிதசித்துக்கள் தச்சக்தி, ததம்சம், தத்விபூதி, தத் [illegible], [illegible]ரம் முதலிய சப்தங்களாலே சொல்லப்பட் [illegible]. ([illegible]டரும்)

## [illegible] காலக்ஷேப சாத்துமுறை.

[illegible] ஸ்ரீ ச[illegible]மத விஷ்ணுசித்த ராமாநுஜஸபையில் சென்ற இரண்டு வருஷகாலமாக பகவத்விஷய காலக்ஷேபம் ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ. உ. வே. நியாய வேதாந்த வித்வான் ஸாது ராமா நுஜாசார்ய ஸ்வாமியால் ஸாதிக்கப்பெற்று நாளது ரக்தாக்ஷி-௵ ஆவணி-மீ 2-உ ஞாயிற்றுக்கிழமை (17—8—24) காலை 9-மணிக்கு ஸ்ரீ கூடலழகப்பெருமாள் ஸந்நிதியில் நம்மாழ்வார் திரு முன்பு சாத்துமுறை நடந்தது.

அப்பொழுது ஸப்ஜட்ஜ் ஸ்ரீ உ. வெ. **V**. பாஷ்யமய்யங்கார் ஸ்வாமி, டிப்டி கலெக்டர் ஸ்ரீ உ வே சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமி, வக்கீல் ஸ்ரீ உ. வே. T. S. இராமஸாமி ஐயங்கார்ஸ்வாமி, வக்கீல் ஸ்ரீ உ வே. நரசிம்மய்யங்கார்ஸ்வாமி, மதுரைத் தமிழ்ச் சங்[illegible]சங் தமிழ்ப்பத்திராதிபர் ஸ்ரீ உ. வே. திரு. நாராயணையங் கா[illegible] முதலானவர்கள் எழுந்தருளியிருந்தார்கள். முனிஸிபல் ஆ[illegible]றைட்ளர்க்கு வேங்கடாசல மையங்கார்ஸ்வாமி மு[illegible]லக்ஷேபம் ஸாதித்த ஸ்வாமிக்குச் சுமார் 150 ரூ[illegible]ராதனைக்குரிய வெள்ளிப்பாத்திரங்கள் ஸ[illegible]கார்கள். ஸபையார்களும், அங்கெழுந் தருளியிருந்த [illegible]யார்களும் இயன்றவளவில் ஸம்பாவனைகள் ஸம[illegible]த்தார்கள். காலக்ஷேபம் ஸாதித்தருளிய ஸ்வாமி விஷயத் தில் ஆசுகவிப்ராணீதமான ஸம்ஸ்கிருத சுலோகங்கள் சொல்லி ப்ர சம்ஸிக்கலாயிற்று. அதன்பிறகு, ஆங்கெழுந்தருளியிருந்த சில பெரியோர்களால் இம்மதுரைமாநகரில் இச்சபையில் இத்தகைய காலக்ஷேபம் எப்பொழுதும் நடந்துவர வேண்டுமென்றும், அதற் குரிய முயற்சிகளை ஸபையோர்கள் செய்யவேண்டுமென்றும், தார்மீ கர்களைவரும் தங்களாலியன்றவரை அதற்குப் பொருளுதவி செய்யவேண்டுமென்றும் உபந்நியஸிக்கப்பட்டன. ஸந்நிதியில் கோஷ்டிவிநியோகமும், ததீயாராதனமும் மிக்கவிமரிசையாய் நடைபெற்றன.

இச்சபையில் இதுபோல நித்யகாலக்ஷேபம் நடைபெற்று வரு வதற்கும், இதன் சார்பாய் ஒரு ஸம்ப்ரதாயபாடசாலை ஸ்தாபிப்ப தற்கும் இச்சபையார்கள் வேண்டிய முயற்சிகள் செய்து வருகிறார் கள். அதற்கு எல்லா தார்மிகர்களும் துணையாயிருக்கவேண்டு மென்பது அவர்களின் பிரார்த்தனையாம்.





தியில் திருக்கோயில் கொண்டுள்ள ஸ்ரீவைகுண்ட நிகேதனனை ஸர்வேசுவரனுடைய அஷ்டாங்கவிமானத்தின்மீது அதன் சாயை படிந்தது. உடனே அவ் வெம்பெருமானுடைய அடியார் குழாங் களெல்லாம் அதனைச் செல்லவொட்டாமல் தடுத்தனர்.

அங்ஙனம் தடைசெய்யப்பட்ட அவ் விமானம் விசும்பினின் றும் இழிந்து கீழே சுழன்று விழுந்தது. அதுகண்டு அரசன் மனம் கவலைக்கடலில் ஆழ்ந்தது. அப்போது செய்வது இன்னதென்று தெரியாமல் அவன் அறிவுகலங்கினன். ஆயினும் அவன் ஒருவாறு உள்ளந்தெளிந்து தான் ஏதோஒரு அபராதம் புரிந்துவிட்டதாக நினைந்து வருந்தியகாலத்தில், அங்குள்ள விஷ்ணுபாரிஷதர்களுள் ஒருவர் அரசனையணுகி, ஓ வேந்தே! நீ சார்ங்கபாணியான எம்பெரு மானிடம் அபசாரப்பட்டனை; அப் பாதகம் இன்னதென்று அறிய முடியாதகாரணத்தினாலேயே நீ இதுபொழுது கிலேசமுறுகின்றாய். ஆதலால் அழகுபொருந்திய கூடல் நகரிலுள்ள சுந்தரராஜப்பெரு மாள் திருவடிகளில் நீ நின் தேவியோடும் சரணாகதிபண்ணி அப ராதக்ஷாபணம் செய்துகொள்ளுவாயாக;' என ஆக்ஞாபித்து முன்னே நடந்துசென்றார். அரசனும் அதுகேட்டு மிகவும் மனங் களித்து அவ் வெம்பெருமானை வாழ்த்துவானாயினன்.

தேவதேவேசநின் திருவடிக்கமலமே
நாவினால்முறைமுறைநமவெனப்பணிகுவேன்
ஆவலால்அழகியஅடிகளால்அடிகள்மார்
பாவராசிகளெலாம்விடெப்படுவரால்.

காமமெண்கோபம்வெம்பசியெனுங்கனல்சுடத்
தாம்மயங்குயிர்களுக்குஉறு திசேர்தஞ்சம்நீ
ஆம்அதன்தொகுதிகட்குஆதியோடந்தநீ
காமனன்பகுதிநீபுருடன்நீ நாரணா.

தேவாதி தேவரான திருமாலே! உம்முடைய திருவடிப் போதுகளைப் பலமுறை நாவினால் வாழ்த்தி நமஸ்கரிக்கின்றேன். தேவரீருடைய பாதஸேவையினால் பாகவதகோடிகளெல்லாம் பா பங்களினின்றும் விடுபடுகிறார்கள். காமம் முதலான குற்றங்களால் அறிவுகலங்கின உயிர்கள் நல்வழிப்படுவதற்கு நீர் உறுதியான பற்றுக்கோடாய் நிற்கிறீர். உலகின்கண்ணுள்ள சராசரப் பொருள் களுக்கெல்லாம்ஆதியும் அந்தமுமாய்இருப்பவரும்,ப்ரக்ருதி புருஷ

தத்வங்களை யுள்ளவரும் நீரேயாவீர்' என்று பிருதுச் சக்ரவர்த்தி ஸ்தோத்ரம் செய்துகொண்டு, தன்பத்தினியுடன் விமானத்தினின்றும் வெளிப்போந்து ஸ்ரீமந்நாராயணனுடைய ஸந்நிதியுள்ள விடத்தை நாலாபக்கங்களிலும் தேடித்திரிந்தான்

அப்போது வைகை நதிக்கரையின் ஒருபக்கத்தே அஷ்டாங்க விமானம் அவன் கண்ணுக்குப்புலப்பட்டது. ப்ருஹ்மா முதலான தேவ கணங்களும் திக்பாலகர்களும், அஷ்டவசுக்களும், சனகர் சனந்தனர் முதலான அருந்தவர்களும் வழிபட்டு வணங்காநின்ற அந்தஅழகிய விமானத்தை அரசன் தன்விழிகளாற் கண்டவுடனே விம்மிதனானான். அழிவில்லாத பெரிய அகமகிழ்ச்சி கொண்ட அவன் உடனே தனது எட்டு உறுப்பும் நிலந்தோய விழுந்துநமஸ்கரித்தான். பின்பு எழுந்திருந்து தன் கைகளைக் கூப்பியவாறே ஆனந்தத்தால் கூத்தாடினான்.

அதுகண்டு அப்பெருமான் அவனிடம் கருணைகூர்ந்து விமானத்தினின்றும் வெளிப்பட்டு, மஹாபாக்யசாலியான அந்த மன்னவன் கண்முன்பே தர்சனீயனாய் விளங்கினான். விளங்கினவன் சக்ரவர்த்தியை நோக்கி ஹே மஹாராஜனே! கேட்பாயாக; இந்த மதுரா நகரத்தினிடத்திலே எழுந்தருளியிருப்பதற்கு நாம் மிகுதியும் திருவுள்ளம் பற்றினோம்; இந்த நிலவுலகத்தில் வேறெந்த ஸ்தலத்திலும் ரிஷபாசலத்திலுங் கூட, வாஸமாயிருப்பதற்கு நாம் அவ்வளவாகமனங்கொள்ளவில்லை ஆதலால், ஆசிருதர்களிடத்தில்அனுக்ரஹத்தோடு இந்த திவ்யதேசத்தில் திருக்கோயில் கொண்டிருக்கிறநாம் உலகமுள்ளளவும் அதைவிட்டு ஓரிடத்தும் அகல்வதில்லை; ஓ வேந்தனே! நீ ஒரேமனதாக எம்மிடம் அன்புசெலுத்தி உன்னுடைய உத்க்ருஷ்டமான த்ரவ்யங்களையுங் கொண்டு எமக்குப் பல திருப்பணிகளைச் செய்வாயாக; அன்றியும் சாஸ்த்ர மர்யாதையாக எமது திருவடிகளைப் புஷ்பங்களால் அர்ச்சித்து எக்காலத்தும்இறுதியில்லாததான எம்முடைய சாமீபமும் சேரக்கடவை' என்று சொல்லி முடிந்தபிறகு ஆகாசத்தில் அந்தர்த்தானமானான்.

அதுமுதலாக அந்தப் பிருது வேந்தனும் தன்ராஜபத்நியுடனே அவ்விடத்தில் நெடுங்காலம் நிலைபெற்றிருந்து எம்பெருமானை வழிபட்டு வந்தான். அளகாபுரியின் அதிபதியான குபேரனும்மாண



மடையுமாறு அளவில்லாத நிதிகளை அவன் பகவத் கைங்கர்யத்திலே வினியோகம் செய்தான். அவ்வாறே இன்றும் அவன் அவ்விடத்தில் பெருமாளுடைய திருவடிகீழலை விட்டுப்பிரியாதிருக்கிறான். நாரதமுனிவர் இந்தவ்ருத்தாந்தத்தை எனக்கு விளக்கக் கூறினார்; ஹே ஸாரஸ்வததீரவாஸிகளான மஹரிஷிகளே! சிரத்தையும் பக்தியும் உடையவர்களாய் இதைக்கேட்பவர் எவராயிருப்பினும் அவர் ஸ்ரீமந் நாராயணனுடைய ஸாயுஜ்ய பதவியை அடையக் கடவர்'' என்று இவ்வாறு வ்யாஸர் சௌனகாதியர்க்குச் சொல்லிமுடித்தார்.

## காலநேமியைவதைத்தல்.

அவ்வாறுகூறிமுடித்த வியாசமுனிவரை அருந்தவரனைவரும் மற்றும் ஒருமுறை தொழுது, ஓ ஸ்வாமியே! பரமபத நாதனை பகவான் உகந்து வர்த்திக்கிற மதுரையின் மான்மியம் எல்லாருங் கேட்க எளிதிற்கிடைப்பதன்று; எங்கள்விருப்பத்தின்படி தேவரீர் அருளிச்செய்ததனால் நாங்கள் க்ருதார்த்தரானோம்; ஆயினும் இப்பொழுது அந்த அஷ்டாங்க விமானத்தின் மேற்றிசையிலுள்ள அதிசயங்களை அறிய அவாவுடையவர்களாயிருக்கிறோம்; ஆதலால் அதனை அடியோங்களுக்கு அறிவிக்கவேண்டும்: என்று ப்ரார்த்தித்தார்கள். வியாசரும் அதற்குமறுமொழியாக, ''மதுரையின்மேற்கே ஒருயோஜனைதூரத்தில் நைமிசாரண்யம் என்ற க்ஷேத்ரம் உள்ளது; தேவர்களுக்கெல்லாம் ப்ரபல விரோதியாய் ஒருவராலும்நாசமடையாதிருந்த காலநேமியென்னும் பெயரையுடைய ஓர் அசுரன் மாயவனுடன் போர்செய்து அவ்விடத்திலே மாண்டனன்'' என்று சொன்னார் உடனே சௌனகாதியர் வ்யாசரைப் பலவாறுமுகப் புகழ்ந்துரைத்துத் தங்களுக்கு அந்த வ்ருத்தாந்தத்தை விஸ்தரித்துச் சொல்லுமாறுவேண்டிக்கொண்டார்கள். அவ்வாறே அதற்குடடன் பட்டுமுனிபுங்கவரும் முகமலர்ச்சியோடுமொழியத்தொடங்கினார்.

''நைமிசாரண்ய க்ஷேத்திரத்திலே 'ஆம்பிரவனம் என்று ஒரு வனம உண்டு. அது மா, பலா, தென்னை முதலான வ்ருக்ஷங்கள் அடர்ந்து க்ஷணிகம் தோறும் வளர்தலால் புதிது புதிதான அழகுடையதாய், பார்ப்பவர்களுக்கு நேத்ரானந்தத்தை விளைக்கிறது. செடிகளும், கொடிகளும், புதர்களும், மரங்களுமாகிய எல்லா விடங்களிலும் இதழ்விரிந்த மலர்கள் நிறைந்து இனிமையான வா

சனை வீசுகின்றன. அங்குள்ளமரங்கள் அனைத்திலும் நாவிற்கு நல்ல சுவையை அளிக்கின்ற கனிவகைகள் அநேகம் காணப்படுவதால், அவ்வனம் எல்லா விதத்தாலும் இன்பத்தையே தரத்தக்கதாகும். அங்குள்ள ஓஷதிவர்க்கங்களும் அளவிறந்தனவாம். நீரோடைகளும் பூம்பொய்கைகளும் அச்சோலையைச் சூழ எங்கும் நிர்மலமாய் விளங்குகின்றன. யானையும், சிங்கமும், காட்டெருமையும், ஓநாயும், தகரும், மரையும், மானும் ஆதிய விலங்கினங்கள், முற்றத்துறந்த முனிவர்களைப்போல ஒன்றற்கொன்று ஒற்றுமை யுடையனவாய் விரோதபாவம் நீங்கி அங்கே விளையாடுகின்றன.

இவ்வாறு மனத்தைக் கவரும் மாண்புடையதான அவ்வாம்பிரவனமானது குபேரனால் வைத்து வளர்க்கப்பட்ட சைத்ரரதத்திற்குச் சமானமாயுள்ளது. ஆகையினாலேஅதற்குச் 'சித்திரத்தேர்வனம்' என்று மற்றொருபெயரும் வழங்குவதுண்டு. அது மிகுந்த புனிதமுடையதாதலால் அருந்தவர் அநேகர் நாநாதேசங்களினின்றும் அவ்விடத்தை நாடி வருகின்றனர். அங்கே வந்து தவம் செய்வோர்களுக்கு எண்ணியவெல்லாம் எளிதில் கைகூடுகின்றன.

முன்பு ஒருகாலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தீவிரமான பகைமைமூண்டது. அப்பொழுது அசுரர்களுடைய அளவில்லாத ஆற்றலைக்கண்டு அமரர்கள் யாவரும் அச்சத்தால் நடுக்கமுற்றார்கள் திக்பாலகர்களும் செய்வதறியாமல் திகைத்தனர். இந்திரனும் கூட அப்பகைவர் முன் இளைத்து ஓடத்தலைப்பட்டான். அதனால் இமையவர் அனைவரும்தமது பதவியை இழந்து வானுலகினின்றும் கீழே இழிந்தனர். சோகத்தாலும் பயத்தினாலும் பீடிக்கப்பட்ட அவர்கள் ஸர்வாபீஷ்ட பலப்ரதமான தேசமென்றுகருதி இந்த ஆம்பிரவனத்திலே அடைந்தார்கள். அவ்வாறு அடைந்தவர்கள் அங்கே அரிய பெரிய தவமியற்றி இஷ்டசித்தியைப் பெற்றனர். அதனால் அவர்கள் அசுரர்களை நாசம்செய்து தேவலோகத்தில் தங்கள் தங்களுக்குரிய ஸ்தானங்களை அடைந்து நிர்ப்பயமாய் வாழ்வாராயினர்.

அன்றியும் வேறு ஒருகாலத்தில், ஆலகாலவிஷத்துக்கு நிகராகத்தீமையைச்செய்பவனான காலநேமியென்பான் அசுரர்களுக்கு அதிபதியாயினன். அவன் ஒருவராலும் வெல்லமுடியாத புஜபலமும்வரபலமும் ஒருங்குவரப்பெற்றிருந்தனன் அதனால்எல்லா உலகங்களையும் தன்வசப்படுத்திக் கொண்ட அவன், தனதுகொடிய ஆஜ்ஞையை எங்கும் செலுத்திவந்தான். அவன் முன்பு அமரர்களும் அஞ்சி நடுங்கினார்கள்.



அப்பொழுது தேவர்களும் அசுரர்களும் ஒருவருக்கொருவர் யுத்தஞ்செய்யுமாறு நேரிட்டது. யுகாந்தகாலத்திலே ஸப்த ஸாகரங்களும் உத்கோஷத்துடன்பொங்கி எழுவதைப்போல, காலநேமி தன்சைனியங்களோடும்கிளர்ந்து சண்டைசெய்யத் தொடங்கினன். வடவாமுகாக்னிக்குச் சமானமான சீற்றத்தோடு, கண்களில் தீப்பொறிபறக்க அவ்வசுரன் ஆக்ரமிப்பதைக் கண்டதேவர்கள் அனைவரும் திசைதோறும் சிதறி ஓடினார்கள். அதனால் காலநேமி ஜயசீலனாய்தேவலோக முழுமையும் தன்னதாகக்கைப்பற்றிக் கொண்டான்.

அதன்பிறகு அந்த துராத்மாவான அசுரன் பூமியில்அடைந்து அந்தணரும், சான்றோரும், அருந்தவத்தோரும் முதலான ஸாது ஜனங்களைப் பலவிதத்தாலும் ஹிம்ஸிக்கலானான். அவ்வாறு அயலார்களுக்கு இடுக்கண் விளைப்பதிலேயே அவன் மனம் மிகவும் களிப்புற்றது.

ஆதலால் அந்தஹிம்ஸையை ஸஹிக்கமாட்டாத தேவர்களும் முனிவர்களும் திருப்பாற்கடலை நோக்கிச்சென்று அங்குள்ள தேவதேவனை திருமாலைச் சரணமடைந்தார்கள். 'புஜக ஸயனத்தின்மீது கண்வளர்ந்தருளுகிற ஓ புருஷோத்தமனே! உன்அடியவர்களான எங்களுடைய சரணாகதியை ஏற்றருள்வாயாக; முன்னொருகாலத்தில் முதலையினால் நலிவுபட்ட கஜேந்திராழ்வாருக்குக் கருணைபாலித்த நீ இப்பொழுது எங்களையும்காப்பாற்ற வேண்டும்; பகைவர்களான நிசாசரருடைய பராக்ரமத்தினால் நாங்கள் நிலைகுலைந்து வருந்துகின்றோம்; அவர்கள் முன்பு எங்களுடைய ஆயுதபலமும் அழிந்துதோள்வலியுந் தொலைந்தது; எக்காலத்தும் எமக்கு உற்றதுணையாய் உதவிநின்ற பஞ்சதருக்களும் இப்பொழுது பயனற்றனவாய் ஒழிந்தன; அதனால், உன்னிடம் அன்புபுரியாதவர்களைப்போல நாங்களும் அரிய பெரிய துயர்க்கடலில் அழுந்தியவர்களானோம்; ஆகையால் களைகணற்றவர்களாகிய எங்களை நீயே கரையேற்றி யருளவேண்டும்:' என்று இவ்வண்ணமாக அவர்கள் அவனிடம் ப்ரார்த்தித்துக் கொண்டனர்.

எல்லாவுலகங்களுக்கும் நாயகனுனஎம்பெருமான், அதுகேட்டு அத்தேவர்களுக்கு அபயமளித்தான். அவன் மேலும் அவர்களை நோக்கி, 'கிருதமாலாநதிக்கரையிலேகடம்பவனத்தாற்சூழப்பட்ட ப்ரதேசத்தில் மதுரை யென்னும் மாநகர் ஒன்று மாட்சிமைப் பட அமைந்து விளங்குகின்றது; அதுதன்னிடத்து வாழ்பவர்களுக்கு எக்காலத்தும் வளந்தருதலால் யாவராலும் புகழ்ந்து பேசப்படுகிறது; அங்கே, மிகுதியும் அழகுவாய்ந்ததும் எட்டுருப்புக்களால் இயன்றதுமான விமானமொன்றில் யாமெப்பொழுதும் விரும்பி வீற்றிருந்தருளுவோம்; இப்போது உங்களுடைய வேண்டுகோளின்படி அங்குநின்றும் புறப்பட்டு அக்காலநேமியசுரனைக் கடிதிற் கொல்லுமாறு கருதியுள்ளோம்; ஆதலால் இனிநீங்கள்ஒன்றற்கும் அஞ்சவேண்டுவதில்லை' என்று உறுதிமொழிகூறி, அவ்விண்ணவர்களுக்கு விடைகொடுத்தருளினன்.

அவ்வாறே பிறகு தேவர்களும் முனிவர்களும் ஆம்பிரவனத்தைஅடைந்தார்கள். அங்கேஅவர்கள் அருந்தவம்புரிந்தவர்களாய் நீலமணிபோலும் நிறத்தையுடைய செங்கண்மால் எப்பொழுது எழுந்தருளுவானே என்று எதிர் பார்த்த வண்ணமாகவே இருந்தனர். அந்த சமயத்தில் காலநேமியும் அங்குவந்துஅவர்களைப் பலவாருகத் துன்புறுத்தத் தொடங்கினன். அதனுல், மதுசூதனனையே மனதில் நினைத்திருந்த அந்தமாதவர்களும் வானவர்களும் தமது சமாதிநிலை குலைந்து சஞ்சல முற்றுர்கள்.

அக்காலனென்னைதிர்காலநேமி அவுணன் றனக்குவெருவி
இக்காலம்யாமுமஃதுசெய்தும்என்ன இமையோர்நடுங்கிஅவனை
தொக்கார்கள்விண்டுசரணம்தமக்கொர்அரணென்றுசூழ்ந்தபொழுதின்
மிக்காம்வனத்தின்அவர்காணும்வண்ணம்வெளிவந்துகொண்டனைபரல்

அறவைத்தசெம்பொனிறவைப்பிலங்குபறவைக்குவேந்தனவன்மேல்
உறவைப்பொருந்திமுறையிட்டடைந்தஉரவோர்கள்துன்பம்ஒழியக்
கறவைக்குடங்கள்குருளைக்கிரங்குகனிவாய்விரைந்துவரலும்
துறவுற்றதொண்டர்சுரர்சித்தர்கோடிஜுதிசெய்துசூழ்ந்துதொழுதார்.

அவ்வேளையில் புயல்வண்ணனை புருஷோத்தமன் மிகுந்த பரபரப்போடு பக்ஷிராஜனை வாஹனமாகக்கொண்டு அந்தவனத்தின் நடுவே வந்து தோன்றினன். உருக்கிவார்த்த பொன்னைப் போல் ஒளிபொருந்தின திருமேனியையுடைய அந்தப் பெரியதிருவடியின்



மீது எம்பெருமான் எழுந்தருளி ஸேவைஸாதிப்பதைக்கண்ட உம்பரும் முனிவரும் உள்ளங்குளிர்ந்து உவகையால் நிரம்பினர். உடனே எங்கும் ஜயகோஷம் முழங்க அவர்கள் அவனைச் சூழ்ந்துநின்று ஸ்தோத்திரம் செய்யலாயினர். அப்பொழுது பெருமாள் அவர்களுக்கு அஞ்சலென்று அருள்புரிந்து, கன்று பசித்துநிற்கக் கறவைகள் அவற்றிற்குக் கனிவோடு பால்சுரந் தூட்டுவதை ஒப்ப, இனிய வசனங்கள் கூறி அவ்விம்பவரை இடரொழியுமாறு தேற்றினன்.

அஃதவ்வாறுன தருணத்தில் காலநேமியும் தன் அசுரர் கூட்டத்தோடு அங்குவந்து சேர்ந்தான். தேவர்கள் அவர்களோடு யுத்தம் செய்ய ஆரம்பித்தனர். ஆனுலும் அசுரர்களுடைய பராக்ரமம் அதிகமாகவே இருந்தது. அதனுல் அவர்களை எதிர்த்து நிற்கமாட்டாத அமரர்கள் புண்பட்டமெய்யோடு புறங்காட்டிஓடத்தொடங்கினர்கள்.

படர்ந்துதீயர்தாக்கலிற்பயந்துதத்தம்உயிர்பெறக்
கிடந்தகாதல்முன்செலக்கிளர்ந்தசிந்தைபின்செல
உடன்றுடன்றடர்ந்தஉம்பர்ஊறுபாயும்மெய்யராய்
இடைந்துதானவர்க்குடைந்திரைந்துதிக்குமோடினர்.

அதுகண்டு சார்ங்கபாணியான திருமால்அசுரர்மீதுபல சரங்களைத் தொடுத்தான். அதனுல் அவர்களில்அனேகர் கரங்களற்றவர்களும், கால்முறிந்தவர்களும், காதிழந்தவர்களும், கண்தொலைந்தவர்களும் ஆயினர்.

அம்புபட்டதானைநான்கிலானைபட்டகளமெலாம்
கொம்புபட்டவால்பதம்துதிக்கையேகுவிந்தன
வெம்புபட்டமன்னர்மாழ்கிவீழ்ந்ததேறில்வீழ்பரி
வம்புபட்டசவரிபோலவாலெடுத்துவீசுமால்.

அன்றியும் அவ்வம்புகள் பாய்ந்து அசுரர்களுடைய யானைப் படைகளைச் சின்னபின்னமாகத் தகர்த்தன. யுத்தகளத்தில் எங்கு பார்த்தாலும்யானையின் தந்தங்களும், நெற்றிப்பட்டங்களும், கால்களும், வால்களும், துதிக்கைகளுமே குவியல் குவியலாய்க்காணப்பட்டன. தேர்வீரர்யாவரும்தேர்த்தட்டிலேமாய்ந்து விழுந்தனர் குதிரைப்படைகளும் மாண்டு சூழ்துயிரும் குறையுடலுமாய்ப்

பூமியிலே கிடந்து புரண்டன. அப்பொழுது ரணத்தின் வேதனை யினால் அவைகள் அடிக்கடி வால்களை மேலே தூக்கிவீசின. அது அப்போரிலே இறந்துபட்ட சுத்தவீரர்களுக்காகப் புதுமையான தொரு வெண்சாமரையிரட்டுதலைப் போல விளங்கிற்று. இன்னும் அந்த அமர்க்களத்தில் அசுரர்படைகள் அடைந்த நாசத்திற்கு அளவே இல்லை. அங்கேரத்தவெள்ளம் பெருக்காறெடுத் தோடிற்று காகமும், கழுகும், நாயும், நரியும்,பேயுமாகிய இவைகள் எல்லாம் பெருமகிழ்வோடு திரள்திரளாக நட்டமிட்டன.

இவற்றையெல்லாம் கண்டிருந்த காலநேமியின்கண்கள் கனல் சொரிந்தன, அவன் அதிசீக்கிரமாக, திருத்துழாய்மாலையையணிந்த மாயவனை வஞ்சனையாகப்பின் தொடர்ந்து சண்டைசெய்ய எத்த னித்தான். அந்தச்சமயத்தில்—

நிறங்குலாயவூழிகாலநீலமேகம்எழும்வந்து
இறங்குகுன் றமென்றுபுள்ளின்வந்தல்மீதுபோந்தமால்
கறங்குபோல்விரைந்துதேர்கடாய்விடாதகள்வனை
அறங்கொதித்ததென்னநெஞ்சழன் றுபின் றுரத்தினன்.

வேலைபேழுமலைகளேழுமேலகீழவாகிய
ஞாலமேழுமதலமேழுநடுநெங்கியதிரவும்
மாலைகாலைதிசைபிறழ்ந்துகதிர்கள்வீதிமறியவுங்
காலநேமியைத்துரந்துபடையெலாங்கடிந்தனன்.

ஸப்தமேகங்களும் ஒன்றுய்த்திரண்டு பர்வதத்துடனே படர்ந்து வருதலைப்போல, தேவர்களுக்கு முன்பு கருடாரூடனாக வந்து காட்சிகொடுத்த திருமால், கறங்குபோலச் சுழன்று திரியும்படி அதிவேகமாகத் தேரைச் செலுத்தி அவ்வசுரனைப் பின்னிட்டோடுமாறு துரத்தினன். அன்றியும், தர்மதேவதையே மனங்கொதித்தாற்போன்ற சீற்றத்தோடு, அக்காலநேமியின்மீது அவர் பல அஸ்திரங்களைப்ரயோகித்தார். அதனால் ஸப்த ஸாகரங் களும், மலைகளும், பதினாலு லோகங்களும் நடுநடுங்கி அதிர்ந்தன மாலை காலையாகிற காலங்களும் திசைகளும் மாறி ஆகாசவீதியிலே சந்திர சூரியர்களும் தடுமாற்றம் அடைந்தனர்.

இவ்வாறு மிகவும் உக்ரமாக நடந்த அந்த யுத்தத்தில் அவ் வசுரனும் அஞ்சாது, தான்வரப்ரஸாதத்தாற் பெற்றிருந்த ப்ரஹ்ம

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வேண்டுகோள்.

இப்பத்திரிகை வைஷ்ணவ ஸமயக் கொள்கைகளை யெல்லாம் யாவரும் எளிதிலுணர்ந்தொழுகிச் சிறப்பும், சீர்மையுமடைந்து, திருமாலருள் பெறுவதற்கு உபகாரமாகத் தெளிவான தமிழில் எழுதி வரக்கடவும்.

இதற்கு விஷய மெழுதுமவர்கள் வடமொழி, தென்மொழிகளில் வல்லமையும், சந்தேகமறச் சொல்லுமாற்றலுமுடையவர்களாதலால் இது பாலர், பேதையர், பண்டிதர் முதலியோர்களை யெல்லாம் மனமகிழ்விக்கத்தக்கது. இதில் தத்துவம், தருமம், ஒழுக்கம் முதலிய ஸமயக்கொள்கைகளும் இராமாயணம், பாரதம், பாகவதம், விஷ்ணுபுராணம், பகவத்கீதை, ஆழ்வார், ஆசார்யர்கள் அருளிச்செய்த பிரபந்த ரஹஸ்ய வியாக்யானங்கள் முதலியவற்றிலுள்ள அருமையான விஷயங்களும் பொது விஷயங்களும், எளிதாயறிந்து கொள்ளும்படி எழுதி மாதம் ஒருமுறை பிரசுரிக்கப்படும்.

ஆதலால் அபிமானிகளனைவரும் சந்தாதாரராகச் சேர்வதோடு தங்கள் நண்பர்களையும் சந்தாதார்களாகச் சேர்ப்பிக்க வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

பத்திராதிபர்—ஹரிஸமய திவாகரம்.

ஸ்ரீ சரண்யாபிமத விஷ்ணுசித்த ராமாநுஜ ஸபை,

ஸ்ரீ கூடலழகப்பெருமாள் ஸந்நிதித்தெரு,

மதுரை.

---

குறிப்பு:- சென்ற பத்திரிகையிற்கண்ட குறிப்பின்படி இன்னும், சில சந்தாதார்கள் சந்தா ரூபா அனுப்பாதிருக்கின்றார்கள். இனியாவது தயவுசெய்து, சந்தாப்பணத்தை மணியார்டரில் அனுப்பவேண்டியது.

மனோன்மணி விலாசம் பிரஸ்; மதுரை.

